தங்கள் முதலீட்டிற்கு

இதோ ஒரு பொன்னான வாய்ப்பு ...

# 'சுபிட்சத்திற்கு வழிகாட்டி சுமங்கலி"

## பெறுவீர் ரூ.10,000/-

ஆம்! நான்கே ஆண்டுகளில்.

# "சுமங்கலி டெபாசிட் திட்டத்தில்"

## தங்கள் முதலீடு ரூ.5000/-ம் இரட்டிப்பாகிறது

கவர்ச்சிகரமான மாதாந்திர வட்டி வழங்கும்

விகிதங்களில் பிக்சட் டெபாசிட்கள் ஏற்றுக்கொள்ளப்படுகின்றன

| ஒரு வருடம் | இரண்டு வருடங்கள் | மூன்று வருடங்கள் |
|---|---|---|
| 16% | 17% | 18% |

ஒவ்வொரு ரூ. 5000/ம் டெபாசிட்டுக்கும் ஒரு அழகிய வெள்ளி குத்து விளக்கு அன்பளிப்பாக வழங்கப்படும்.




# ஜெயசக்தி பைனான்சியர்ஸ்

39, நடேச ஐயர் தெரு (2வது மாடி)
(சிவா விஷ்ணு கோயில் அருகில்)
உஸ்மான் ரோடு தி.நகர்: சென்னை-600 017
போன்: 447186

125-A, பாம்பாட்டி தெரு, தஞ்சாவூர் போன்: 1626
14-A, ஆனைக்கட்டி தெரு, திருவண்ணாமலை-606 601 போன்: 483
125/2, ஈஸ்டர்ன் எக்ஸ்டென்ஷன், வசந்த நகர், பெங்களூர்-52
போன்: 24795
18, செட்டியார் பில்டிங்ஸ், அறந்தாங்கி ரோடு, பட்டுக்கோட்டை








# ஓ இரயிலே!

வ.வே.சு

இருப்புப் பாதையில் இயங்கிடும் ரயிலே!
சுருக்குப் பாதையில் சொர்க்க நரகங்களைச்
சுற்றிக் காட்டநீ தொடங்கிய தெல்லாம்
சுற்றுலா வளர்ச்சிக்கு உற்றதுணை யாகவா?

ஜனத்தொகைக் கணக்கரின் சோம்பலுக்
குதவவா?

இல்லை
இனப் பெருக்கத்துடன் ஏற்பட்ட மோதலா?

பொருத்தம் இன்றி இருப்புப் பாதையை
விட்டு நீசென்று விலகி மண்ணில்
முட்டிப் புரண்டு புழுதி அளைவதை
ஒப்புக் கொள்ளுமா உடைந்த தாய்மனம்?
செப்பித் தேறுமா செத்த உறவுகள்?

ஓடியும் இடிக்கிறாய் நின்றும் இடிக்கிறாய்!
சோடிப் பாதையில் தொடர்களைத் துறக்கிறாய்
சிவப்பு விளக்கின் குறிப்பை அறிந்தும்
தவறு செய்கிறாய் தடுக்கி வீழ்கிறாய்:

கொல்லும் உரிமை உனக்கென எண்ணினால்
பல்லவன் தன்னைநீ பகைத்துக் கொள்வாய்.
உங்கள்
சாதிச் சண்டையில் மீதிப் பேர்களும்
நாதியற்று நசுக்கப் படுவர்.

ஆறிலும் சாவு நூறிலும் சாவு
என்ற தத்துவப் பின்னணி தன்னை
இந்தியர்க் கெல்லாம் இயம்பும் ஞானியே!
வறுமை, சாதி இவைகள் வசத்தின்
பொறுமைச் சிறையில் பொருமிடும் எமக்குப்
புதிய பாடங்களா புத்தியில் ஏறும்?

கூவெனக் கத்தும்நீ கூகூவென்றால் கூட
பாவம் மக்கள் பதறிப் போகிறார்.
இறங்க வேண்டிய நிலையம் வருமுன்
இரங்கற் பாக்களின் காவியத் தலைவராய்
அனைவரை எண்ணி அச்சப் படுகிறார்!

கடந்த ஆண்டுநீ காலதாமதன்
நடப்பு ஆண்டிலோ காலதூதுவன்!



✖ திருவள்ளுவர் போக்குவரத்து கழக சொகுசு பஸ்

# உலா

திருவள்ளுவர் போக்குவரத்து கழகத்தில் 16 எம்.எம். சினிமாவுக்குப் பதிலாக இப்போது வீடியோ சினிமா வைத்திருக்கிறார்கள். இதனால் ஏகமாகப் பணம் மிச்சமாகிறதாம். சினிமாத் திரை வைக்க நீக்க வேண்டியிருந்த நாலு சீட்டுக்களை இப்போது திரும்பப் பொருத்தி விட்டார்கள்.

சென்னைக்கும் திருவனந்தபுரத்துக்கும், சென்னைக்கும் பெங்களூருக்கும் ஓடும் சொகுசு குளுமை பஸ்கள் இரண்டில் வீடியோ சாதனம் பொருத்தப்பட்டுள்ளன. ஒருதலை ராகம், புதிய வார்ப்புக்கள், ஷோலே போன்றவீடியோ சினிமாக்களை பஸ்ஸில் டீ. வி. திரையில் கண்டு ரசிக்க முடிகிறது. கூடுதல் கட்டணம் இல்லை!

—பி. எஸ். எம்.



✖ என். பாலசுப்பிரமணியம்



✖ ஜம்னாலால் பஜாஜ்

● சென்னையைச் சேர்ந்த என். பாலசுப்பிரமணியம் மீனாட்சிபுரத்துக்குச் சென்று நூற்றுக்கும் மேற்பட்ட மதம் மாறியவர்களை மீண்டும் இந்துக்களாக மாற்றியுள்ளார்.

பி.காம் பட்டதாரியான இந்த இருபத்தியொரு வயது இளைஞர் ''1977ம் ஆண்டு குருநானக் கல்லூரியில் பி.யூ.ஸி. படிக்கும் போதிருந்தே எனக்குச் சமூக சேவை செய்ய ஆசை; என் ஆசைக்கு வடிகாலாக விஸ்வ ஹிந்து பரிஷத் உதவியது. மீனாட்சிபுரம் சம்பவங்கள் என்னுள் ஒரு புது வேகத்தை ஏற்படுத்தின'' என்கிறார்.

ஹரிஜன்களோடு சேர்ந்து சாப்பிட்டு சுற்றிலும் உள்ள பெரியவர்களின் உதவியுடன் ஒரு டீக்கடை உருவாக்கி ஒரு மளிகைக் கடைக்கும் வழி வகுத்திருக்கிறார். ஒரு பள்ளிக்கூடம் கட்டவும் ஏற்பாடு செய்து வருகிறார்.

மதம் மாறியவர்களை மீண்டும் ஹிந்துக்களாக மாற்ற அங்குள்ள காளி கோயிலுக்கு அழைத்துச் சென்று புரோகிதரை வைத்து புண்ணியாவாசனம் நடத்தினார். வருகிற நவராத்திரியை முன்னிட்டு உடுப்பி பேஜாவார் சுவாமிகளின் உதவியோடு 108 குத்துவிளக்கு பூஜை செய்து பெண்களுக்குச் சேலையும் ரவிக்கையும் வழங்கத் தீர்மானமாகியுள்ளது.

''புதிய மீனாட்சிபுரம் உருவாவதுதான் என் லட்சியம்'' என்கிறார் பாலசுப்பிரமணியம்.

—''சிக்கி''

● மிருதங்க வித்வான் யெல்லா வேங்கடேஸ்வர ராவ் அவர்களின் 'மாஸ்டர் பீஸ் 'சிவதாண்டவம்'. ஒரே சமயத்தில் ஐந்து ஏழு... ஒன்பது மிருதங்கங்களைச் சுற்றிலும் வைத்துக் கொண்டு வாசிப்பார். இதற்காக



✖ யெல்லா வேங்கடேஸ்வர ராவ்

ஜாகர்த்தாவில் Asian Broadcasting union இவருக்கு 'தேஹாஷ பங்கா' விருது கொடுத்துக் கௌரவித்தது.

சமீபத்தில் ஹைதராபாத் சிருங்கேரி சங்கர மடத்தில் அரசு சம்பந்தப்பட்ட ஒரு கலைவிழா நடந்தது. திரு வெங்கடேச்வர ராவின் 'மிருதங்க மகா யக்ஞம்'பிரதான அம்சம். இருபத்தாறு மணி நேரம் சற்றும் சோர்வடையாமல் தொடர்ச்சியாக மிருதங்கம் வாசித்துச் சரித்திரம் படைத்தார். ஒருவர் பின் ஒருவராக சுமார் முப்பது வித்வான்கள் கச்சேரி செய்ய அவர்களுக்குப் பக்க வாத்தியமாக இந்தச் சாதனை இடம் பெற்றது. நடு நடுவே 'ஸோலோ'.

மிருதங்கத்திலேயே இவர் 'சாந்தி மந்திரம்' வாசித்துக் காண்பித்த அழகு...! நன்னிரவில் இவருடைய தனிச் சிறப்பு அம்சமான 'சிவதாண்டவத்தி'ன்போது வாசிப்பு உச்ச கட்டத்தை அடைய... ஆயிரக்கணக்கான அவையோர் மெய் சிலிர்த்து உருகிய காட்சி... அந்த விரல்களின் அசைவில் ஜனித்த லய சுத்தமான இனிய நாதம் பூந்தூறல்களாகச் செவியில் புகுந்தபோது மகுடி கேட்ட நாகமாகக் கண் இமைக்கவும் மறந்து மயங்கிக் கிடந்த ரசிகர்களில் ஆந்திர முத



✖ ஜூடோ நிபுணர்கள் நாலுபேரில் ஒருவர்



✖ தராசில் பிள்ளையார்

லமைச்சர் திரு அஞ்சையாவும் ஒருவர். ஓ... அந்த இரவு... எத்தனை ஜன்மங்கள் எடுத்தாலும் மறக்கவியலாத சுகானுபவம்.

— சாந்தா தத்

● குடந்தை அருகில் உள்ள திருவிடைமருதூரில், பிள்ளையார் சதுர்த்தியன்று, களிமண் பிள்ளையாரைத் தராசில் வைத்து நிறுத்து விற்றார்கள்! — கை. இராமமதி

● டோக்கியோவில் இருக்கும் ஜப்பான் ஃபௌண்டேஷன் என்ற அமைப்பு நான்கு பேர் அடங்கிய ஜூடோ குழுவொன்றை இந்தியாவுக்கு அனுப்பியது. இவர்களில் ஒருவர் ஜெயில் வாத்தியார். வேறு இருவர் போலீஸ் துறையினர். இவர்கள் சென்னையில் தங்கள் ஜூடோ கலையைச் செய்து காண்பித்தபோது பார்த்துக்கொண்டிருந்த சென்னை ஜூடோ பயிற்சியாளர் ராஜகோபால் பத்திரிகையாளரிடம் பேசினார்:

''சார்! நாளுக்கு நாள் வளர்ந்து வரும் ஜூடோ கலையின் மாற்றங்களை அறிந்து கொள்ளாமல் பழைய பாணியிலேயே செய்து கொண்டிருப்பேன் என்று முரண்டு பிடித்தால் எப்படி? அப்படித்தான் இந்த ஜப்பானியர்கள் நடந்து கொண்டார்கள். அந்தக் காலத்தில் மிக மிக மெதுவாகத்தான் செய்திருக்கிறார்கள். அதே பாணியில்தான் இன்றும் இந்த ஜப்பானியர்கள் செய்து காட்டினார்கள். நான் செய்து காட்டுகிறேன், பாருங்கள்'' என்று கூறி, பத்திரிகையாளர்களை உட்கார வைத்து ஜூடோவில் வேகமாக இயங்கிக் காட்டினார்!

— ''சலன்''

● ஜம்னாலால் பஜாஜ் பரிசு, ஆண்டுதோறும் சில குறிப்பிட்ட துறைகளில் சிறந்த பணியாற்றிய நபர்களுக்கு வழங்கப்படுகிறது.

யார் இந்த ஜம்னாலால் பஜாஜ் என்று அறிய விரும்புபவர்கள், சென்னை பாரதிய வித்யாபவன் மண்டபத்தில் நடந்த கண்காட்சிக்கு விஜயம் செய்திருந்தால், படேல், நேரு, ஆஸாத், நேதாஜி போன்ற தேசத் தலைவர்களுடன் தோளோடு தோள் நின்று உழைத்த பஜாஜ் அவர்களின் புகைப் படங்களையும் வாழ்க்கைக் குறிப்புக்களையும் கண்டு களித்திருக்கலாம்.

நாட்டின் நிர்மாணப் பணியிலும், மகளிர் குழந்தைகள் மேம்பாட்டுக்கும் உழைத்த ஜம்னாலால் பஜாஜ், 'இந்திய நாட்டின் பொருளாளர்' என்று மகாத்மாவால் புகழப் பட்டவர். நேர்மையான தொழிலும் உழைப்பும் கொண்டு ஈட்டிய பெருஞ் செல்வத்தைத் தர்மகர்த்தா முறையில் ஆக்க வேலைத் திட்டங்களுக்கே அர்ப்பணித்த இந்தப் பெருமகனின் வாழ்க்கைக் காட்சிகள் புகைப்படங்களாக பாரதிய வித்யாபவன் மாடி முழுதும் நிறைந்திருந்தன.

— சாருகேசி தமயந்தி



# குழந்தை உலகம்




## மயங்காதவர் உண்டோ?

வீடு முழுவதும் தவழ்ந்து வருபவள் சில சமயங்களில் ஒரு காலை மற்றொன்றின் மீது போட்டு ஒருக்களித்தவாறு ஓய்வு எடுத்துக் கொள்ளும்போது அவளைப் பார்க்கவே வேடிக்கையாய் இருக்கும். கிட்டத்தட்ட உட்கார்ந்த நிலையில் இருக்கும் அவளை 'எங்கே சிரி, போட்டோ எடுக்கலாம்' என்றால் உடனே தன் பொக்கை வாயைத் திறந்து சிரிக்கவும் செய்வாள்; சமயத்தில் என் வீட்டில் உள்ள கார்னர் ஸ்டாண்டுகளில் சாய்ந்து கொண்டே என்னவோ பெரிய மனுஷி மாதிரி பேசிக் கொண்டு இருப்பாள்.

ஆண்டு நிறைவுக்குத் தனக்குத் தைத்த பட்டுப் பாவாடையைக் கட்டிக் கொண்டு, வந்திருப்பவர்களிடமெல்லாம் ஓடி ஓடிக் காட்டிச் சின்ன விஷயத்திற்கெல்லாம் பெரிதாக மகிழும் என் லக்ஷ்மியைக் கண்டு மயங்காதவர்களே இல்லை.

- கே. எஸ். சுந்தரவல்லி

●

## ஆபத்து விலகியது!

ஒரு நாள் எங்கள் குடும்பத்தவர் அனைவரும் ஹாலில் அமர்ந்து பேசிக் கொண்டிருந்தபோது சமையலறைக்குச் சென்று ஆனந்த் பாட்டிலில் இருந்த மண்ணெண்ணெயைக் கணிசமான அளவு குடித்து விட்டு மீண்டும் ஹாலுக்கு வந்ததை எவரும் கவனிக்கவில்லை. மூச்சுத் திணறி அவஸ்தைப் பட்ட அவன் வாயிலிருந்து வீசிய மண்ணெண்ணெய் நாற்றத்தால் நடந்ததை அறிந்த போது என் உடல் சில்லிட்டு விட்டது. அது பிற்பகல் 12 மணியாதலால் எந்த டாக்டரையும் பார்க்க முடியவில்லை. உடனே ஆட்டோ பிடித்து எழும்பூர் குழந்தைகள் நல ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் சென்றோம். எவ்வளவு மண்ணெண்ணெய் குடித்திருப்பான் என்று திட்டமாகக் கூற இயலவில்லையாதலின் பிராணவாயு கொடுத்து மார்பின் எக்ஸ்ரே எடுத்த டாக்டர் 24 மணி நேரம் கழிந்த பின்தான் எதுவும் கூற முடியும் என்று கூறி விட்டார். கண்ணிமை அசையாது குழந்தையின் அருகிலேயே நான் 24 மணி நேரமும் அமர்ந்திருந்த போது என் குழந்தையின் உயிரைத் தவிர எனக்கு வேறெதுவுமே கண்ணில் தெரியவில்லை. டாக்டர் சொன்ன கெடு முடிந்து என் குழந்தை கண் விழித்துச் சிரித்த போது அப்பப்பா! நான் அடைந்த ஆனந்தம் அளவிட இயலாதது.

- கீதா கண்ணன்

## ஞானு ரொம்பப் பொல்லாதவள்!

வீட்டில் கண்ணாடி அணிபவர் அதை ஒளித்து வைக்க ஆரம்பித்தார்கள். ஏனென்றால் என் பெண் ஞானுவுக்குப் பிடித்தது, கண்ணாடி அணிந்து கண்ணாடியில் அழகு பார்ப்பதுதான். அவள் நடையே தள்ளாடி நடை. இதில் நடனம் வேறு ஆடத் தொடங்குவாள், பாட்டு கேட்ட மாத்திரத்திலேயே. அவளுக்கு மிகவும் பிடித்த விளையாட்டு சுவரில் உள்ள கண்ணாம்பைச் சுரண்டி, நட்சத்திர வடிவங்களை உண்டாக்குவது தான். வீட்டிலுள்ளோர் யாரிடமும் எதுவும் வாங்கி சாப்பிடக் கூடாது என்று நான் அன்புக் கட்டளை இட்டிருந்தேன். அதனால், அவளும் யார் எது கொடுத்தாலும், கதவிடுக்கில் ஒளிந்து கொண்டு சாப்பிடுவாள். நான் கோபத்துடன் அடிக்க வந்தாலோ... அவள் தன் முன்னிரண்டு பற்களைக் காட்டித் தான் செய்தது தவறு என்ற பாவனையில் அழகாக 'ஸாரி' என்றுகூறி என்னைச் சிரிக்கவைப்பாள்.

– குந்தவி ராமச்சந்திரன்



## டெலிபோன் பார்ஸல்!

பாரிஸில் உள்ள லூவர் மியூசியத்திற்குப் போயிருந்தோம். அங்கு உள்ள புகழ் பெற்ற 'மோனா லிசா' படத்தின் அருகே ஒவ்வொருவருக்கும் டெலிபோன் மாதிரி ஒன்று கொடுக்கிறார்கள். அதை நாம் காதில் வைத்துக் கொண்டால் 'மோனாலிசா'வின் 'வாழ்க்கைக்கதை'யைக் கேட்கலாம். நானும், என் கணவரும் அதைக் கேட்டுக் கொண்டிருந்தபோது, திடீரென்று என் மகனின் பயங்கர அழுகை சத்தம் அந்த ஹாலையே கிடுகிடுக்கவைத்தது. நாங்கள் தவிக்க அருகிலுள்ள வெளிநாட்டவர் தம் காதிலிருந்த போனை அவன் காதில் வைக்க உடனே சிரிக்க ஆரம்பித்து விட்டான் என் குட்டிப்பயல்..

அடுத்த நாள் மாலை நாங்கள் 'ஷாப்பிங்' போனபோது அதே மனிதரை அவர் மனைவியுடன் பார்த்து 'விஷ்' செய்தோம். கையில் 'இகக் பிகக்' என்று ஒட்டிக் கொண்டிருந்த சாக்லேட் பிகக்குடன் அந்த மனிதரைப் பார்த்தவுடன் அவரிடம் தாவினான் என் குழந்தை. சிரித்தபடி அவனை வாங்கிக்கொண்டு சாக்லேட் வாயில் முத்தமிட்டு 'ஸ்வீட் பேபி' என்றபடி இறுக அணைத்துக்கொண்டார். கொஞ்ச நேரம் கழித்து, அந்தத்தம்பதி, ஒரு பார்சலை வாங்கி என் குழந்தையின் கைகளில் திணித்து விட்டுச் சென்றனர். அது ஒரு அழகான டெலிபோன்.!

எம். சுமதி






● அட்டைப் படத்தைப் பார்த்ததும் மனம் குளிர்ந்தது. என்னைப் போன்ற இளைஞர்கள் ரசிகமணி டி.கே.சி.யை நேரில் பார்க்க முடியாவிட்டாலும் 'கல்கி'யின் வாயிலாக அவரைத் தரிசிக்கவும் அவரைப்பற்றி அறியவும் முடிந்தது.
லெட்சுமாங்குடி — ஏ.கே. நாசர்

● தலையங்கம் மிக வெளிப்படையாகவும் உறைக்கும்படியாகவும் இருந்தது. இதுபோல் இனிமேலும் தொடர்ந்து எழுதுங்கள்.
சென்னை-17 — சௌந்தர்

● கணேஷ்: என்ன வசந்த்! இப்படி விழுந்து விழுந்து சிரிக்கிறே?
வசந்த்: இல்லியே, படிச்சுப் படிச்சுத் தான் சிரிக்கிறேன்! இப்ப வர்ற படங்களை விட கல்கியிலே வர்ற விமர்சனங்கள் ரொம்ப நல்லா இருக்கு, பாஸ்!
நயினாரகரம் — மணி

● சாருப்பிரபா சுந்தர் எழுதிய இரண்டு தொடர் ஒரு முற்றும் பலே ஜோர் — அருமை பிரமாதம் — சுபர்ப். இதில் ஏதேனும் ஒன்றை டிக்கிக்கொள்ளுங்கள்!
திருச்செங்கோடு — ஆனந்த்

● ''ஒரு மூளை வேலை செய்கிறது'' என் மூளைக்கு வேலைகொடுத்த அருமையான கதை.
பம்பாய்-59 — வி. இசக்கிமுத்து

● வரதட்சிணைக்காகக் கொடுமைப்படுத்தும் கணவனிடமிருந்து 'விவாகரத்து' பெறுகிறாள் மீனு. கற்பு என்பதற்குக் கண்மூடித்தனமாகப் பொருள் செய்து கொண்டுள்ள இச்சமுதாயத்தினால் வஞ்சிக்கப்பட்ட பெண் ஒருத்திக்கு வாழ்வு தருகிறாள் மீனு. அருமையான பாத்திரப் படைப்பு. நமது சமூகத்தின் மிக முக்கியமான இரண்டு பிரச்னைகளுக்குப் 'புதிய வாசல்'களைத் திறந்து விட்டிருக்கிறார் முத்து. தங்க. ஐயப்பன்.
சென்னை-61 — வி. ஜி. நேசன்

● ராண்டார்கை — வருவான் ராஜகுமாரன் முதல் இதழுக்காக எங்களைக் காத்திருக்கச் செய்வதற்காகத் தங்கள் மீது ஆத்திரம் பற்றிக்கொண்டு வருகிறது.
குரோம்பேட்டை — வி. தியாகு

● 'கிருஷ்ண குரு' என்ற கதாசிரியரை ஒருவர் என்று நினைத்திருக்க இருவராக அறிமுகப்படுத்தி ஆச்சரியத்தில் ஆழ்த்திவிட்டீரே! தோழமைக்கும், இலக்கியத்துக்கும் ஒருசேர நின்று புகழ் படைக்க 'கல்கி' சார்பில் வாழ்த்துக்கள்!
பெங்களூர்-5 — வி. குமார்

● எழுத்து, புகைப்படங்கள் மூலம் நாகராஜா கோவிலின் மகத்துவத்தை அனைவருக்கும் புலப்படுத்திய கட்டுரை ஆசிரியருக்குக் குமரி மாவட்ட மக்கள் சார்பில் ஒரு ஷொட்டு.
தக்கலை — சங்கர சுப்பு

● 23-8-81 கல்கியைக் கொண்டுவந்து என் நண்பர் ஐயப்பன் (கல்கத்தா மிக்கி) என்னிடம் காட்டியவுடன் என் மனம் மிகவும் சங்கடத்துக்குள்ளாகியது. வளரும் இந்த இளம் எழுத்தாளரை என்னுடைய குறும்புத்தனத்தால் களங்கப்படுத்தி விட்டோமே என்றுதான். நான்தான் அவரிடம் இந்த ஜோக்குகளைச் சொன்னேன். இந்தத் தவறுக்கு முழுக் காரணம் நான்தானே தவிர ''மிக்கி'' அல்ல. இந்தத் தவறுக்காக எல்லா வாசகர்களும் என்னை மன்னிக்கவும்.
கல்கத்தா — எஸ். சங்கரன்

● திருமதி வாசந்திக்கு ஒன்று கூற விரும்புகிறேன். மனிதர்கள் குண்டாவதும் ஒல்லியாக இருப்பதும் அவர்கள் கையிலா இருக்கிறது? ஏதோ குண்டாக உள்ளவர்கள் அத்தனை பேரும் பிடிவாதமாகக் குண்டாகவே இருப்பது போல் அல்லவா எழுதியுள்ளார்? (30-8-81 இதழ்) தங்கள் உடல் பருமனைக் கண்டு மனம் வேதனை அடைந்து ஒரு நாளைக்கு ஒரு வேளை உணவு மட்டுமே உண்டும், பலவிதமான தேகப் பயிற்சிகள் செய்தும் உடல் இளைக்காமல் வருத்தமுறும் பலர் உண்டு.

பேசும்போது பேச்சடக்கம் இருப்பதுபோல் எழுத்தாளர்களுக்கு எழுதும்போது எழுத்தடக்கமும் இருக்க வேண்டும்.
சென்னை-5 — ஆர். மணி

● 'தளதா மளிகவா' அல்ல! தலதா மாளிகாவ என்றிருக்க வேண்டும். (30-8-81 இதழ்) மாளிகாவ என்னும் சிங்களச் சொல், தமிழில் மாளிகை எனப் பொருள்படும்.
திருப்பூர் — இரஞ்சிதவல்லி இரத்தினம்

● 9-8-81 இதழ் அட்டைப் படத்தில் மாப்பிள்ளை மாவரைப்பதைப் போட்டீர். அந்த அட்டைப் படத்தைப் பெரம்பூர் மாமியார் ஒருவர் மாவரைக்கும் மெஷினில் ஒட்டி வைத்துள்ள உலக மகா அதிசயத் துணுக்கை 30-8-81 இதழில் வித்தியாசமாக வழங்கினீர். உமக்கும் துணுக்கு அளித்த 'யெம்ஜி'க்கும் வேறு சப்ஜெக்ட் கிடைக்கவில்லையா? எம் போன்ற இளைஞர்களின் வயிற்றெரிச்சலைக் கொட்டிக்கொள்ளாதீர்கள்!
சென்னை-4 — எஸ். லட்சுமணன்

சென்றவருடம் நண்பர்கள், உறவினர்கள் எட்டுப் பேர் கிளம்பி பம்பாய் சென்று அங்கிருந்து அஹமதாபாத் வழியாக 'விராம்காம்' என்னும் ஜங்ஷனை அடைந்தோம். அங்கிருந்து வேறு ரயிலைப் பிடித்துப் பயணத்தைத் தொடர்ந்தோம். பம்பாயிலிருந்து முதல் நாள் மத்தியானம் 3 மணிக்குக் கிளம்பியவர்கள் அடுத்த நாள் மாலை 6 மணிக்கு துவாரகையை அடைந்தோம். விராம்காமிலிருந்து இரயில் கடற்கரை ஓரமாகவே சென்றது. இரு பக்கமும் சுண்ணாம்பு மண்ணாக ஒரே பொட்டல் காடு. ஒட்டகங்கள் மந்தை மந்தையாகப் போய்க் கொண்டிருந்தன. நடு நடுவே சின்னச் சின்னக் கிராமங்கள் வரும்போது ஒட்டகவண்டிகள் தென்பட்டன. ஆங்காங்கே நிறைய ஆண் மயில்களும் பெண் மயில்களும் உலவக் கண்டோம்.

மாலை ஆறு மணிக்குத் துவாரகையை அடைந்தவுடன் இரயில் நிலையத்திலிருந்து கோயில் அருகே உள்ள சத்திரத்துக்குக் குதிரை பூட்டிய கோச் வண்டியில் சென்றோம். வழியில் ஒரே வறண்ட பாலைவனத்தில் பிரயாணம் செய்ததைப்பார்த்ததும் மனத்தில் சிறு கிலேசம் ஏற்பட்டது. ஸ்ரீ கண்ணன் இருந்த இடம் இப்படி இருக்கிறதே என்று. ஆனால் ஊர் மிகவும் செல்வச் செழிப்பாக இருந்தது. எங்கு பார்த்தாலும் ஜே! ஜே! என்று ஜனங்கள். இரு பக்கமும் நிறையக் கடைகள். ஆண்களும் பெண்களுமாகக் கடைகளில் வியாபாரம் செய்து கொண்டிருந்தார்கள். எங்களைப் போல் ஸ்ரீ கண்ணனைத் தரிசிக்க வந்தவர்கள் எத்தனையோ பேர். எங்கே பார்த்தாலும் தின்பண்டக் கடைகள்! மசாலா பால் கடைகள்! தூத்பேடா, கோவா, பூரி, சப்ஜி கடைகள்!

ஓர் அறையை வாடகைக்கு எடுத்துக் கொண்டு எங்களுடைய சாமான்களை வைத்துவிட்டுக் கோவிலுக்குப் போகலாம் என்று எண்ணினோம். அங்கு ஒருவர் கோவிலின் அருகிலேயே கோமதி நதியும் அரபிக் கடலும் சங்கமமாகும் இடம் இருக்கிறதென்றும் அக்கு ஸ்நானம் செய்துவிட்டுக் கோவிலுக்குச் சென்றால் தரிசனம் ஆகும் என்றும் சொன்னார். அப்பொழுது மாலை ஆறரை அல்லது ஏழு இருக்கும். திரை போட்டிருந்தது. ஆகவே அருகில் உள்ள கோமதி நதிக்குப் போனோம். ஆகா! என்ன அருமையான காட்சி! தூரத்தே வலதுபுறத்தில் கடல்! இடது பக்கத்திலிருந்து நதி ஓடி வருகிறது. இரண்டும் சங்கமமாகும்போது ஆர்ப்பரிக்கும் கடல்அலைகளைப் பாதி தென்னை மர உயரத்துக்குக் காணலாம். கடல் பக்கம் போகாமல் நதியிலேயே ஸ்நானம் செய்தோம். தண்ணீர் ஒரே உப்பு. இரண்டு கிலோ மீட்டர் தூரத்துக்கு அப்படித்தான் இருக்குமாம். அலைகளைக் கடல் வாரி இறைக்கும்போது சிறுசிறு வெண்மையான தட்டை கற்களையும் இறைக்கிறது. அதில் சிறு சிறு சக்கர வடிவமான துவாரங்கள் போல் இருக்கின்றன. கடலில் துவாரகை மூழ்கியதால் கண்ணபிரானுடைய அரண்மனையிலிருந்து பெயர்ந்து வரும் கற்கள் இவை என நம்பி ''துவாரகா சிலை'' என்று குறிப்பிடுகிறார்கள். சாளிக்கிராமத்தை எப்படி ஸ்ரீமன் நாராயணன் என்கிறார்களோ அதே மாதிரி இந்தத் துவாரகா சிலையை ''மகாலக்ஷ்மி'' என்கிறார்கள். வீட்டில் வைத்து பூஜை செய்தால் நல்லது என்கிறார்கள். நாங்கள் அந்த நதியில் குளித்த நேரத்தை விட அந்த மணலில் புதைந்திருந்த கற்களைத் தோண்டி எடுத்த நேரம்தான் அதிகம். எங்கள் கோஷ்டியில் இருந்த பெரியவர் ''நீங்கள் ஸ்வாமி தரிசனம் செய்ய வந்தீர்களா? அல்லது கல் பொறுக்க வந்தீர்களா? அங்கே கோவில் கதவைச் சாத்திவிடுவார்கள்'' என்று ஓர் அதட்டல் போட்டவுடன்தான் எல்லோரும் அவசரம் அவசரமாகக் கிடைத்ததை எடுத்துக் கொண்டு கரை ஏறினோம்.

கோயிலுக்குத் திரும்பிச் சுமார் 60 படிகள் ஏறி வாசலை அடைந்தபோது சரியான சமயம்! திரை திறந்தது. ஸ்ரீ கண்ணனைத் தரிசித்தோம். அப்போது இரவு ஒன்பதரை மணி. அங்கே பூஜை செய்பவர்களைக் கண்டு ஒரே ஆச்சரியம். இடையில் பட்டாடை. மேலே பட்டுச் சட்டை. காதில் மகர குண்டலங்கள். கையில் கங்கணங்கள். விரல்களில் மோதிரங்கள். இடுப்பில் தங்க பெல்ட். ராஜ குமாரர்கள் போல் தோற்றமளித்த இருவர் கண்ணனுக்கு உபசாரம் செய்து அர்த்தஜாம பூஜை செய்த காட்சி கண் கொள்ளாக் காட்சி! கண்ணன் முன் சொக்கட்டான் கட்டம் போட்ட பட்டுத் துணியை விரித்தார்கள். வெள்ளிக் காய்களை வைத்தார்கள். இருவரும் சொக்கட்டான் உருட்டி விளையாடிக் காய்களை நகர்த்தினார்கள். இது அந்தக் கோயிலில் ஒரு ஐதிகமாம். உலகத்திலுள்ள ஜீவராசிகள் அவரவர் விதிகளின்படி அவரவர் கர்மாக்களைப் பகவான் கிருஷ்ணன் நிர்ணயிக்கிறான் என்று சொல்பவர்கள் சிலர்.



அரசராக இருந்து ஆண்ட நாளிலிருந்தே அந்தப் பழக்கம். ஆகையால் அதைக் கடைப்பிடிக்கிறார்கள் என்பவர் சிலர். கண்களில் நீர் மல்கக் கண்ணனைத் தரிசித்தோம். ஏதோ கனவுலகில் இருப்பது போலிருந்தது.

கோவிலைச் சுற்றிப் பார்த்துவிட்டுச் சத்திரத்துக்குத் திரும்பி வந்தோம். மறு நாள் காலை மறுபடியும் கோமதி நதியில் நீராடிவிட்டுக் கோவிலுக்கு விசுவரூப தரிசனம் செய்யச் சென்றோம். அன்று வெள்ளிக் கிழமை. ஏகாதசி திதி. அந்தப் புண்ணிய தினத்தில் அங்கு கண்ணனின் சேவை மிகவும் அற்புதம். குருவாயூரில் எப்படி ஏகாதசி திதி முக்கியமோ அதே போல் தான் அங்கும். விசுவரூப அலங்காரம் அப்படியே குருவாயூரப்பன்தான்! அந்த ஊர்ப் பெண்களும், ஆண்களும் மற்றும் வந்திருந்தவர்கள் அனைவருமாக இரண்டு மணி நேரம் பஜனை செய்தார்கள். அவர்கள் உரத்த குரலில் கிருஷ்ணனுடைய நாமாக்களைப் பாடி பஜனை செய்யும்போது நாமும் நம்மை அறியாமல் சேர்ந்து கொள்கிறோம் இங்கு துலாபாரமும் உண்டு.

கண்ணனுடைய மாளிகை இருந்த ''பேட் துவாரகா'' என்னும் இடத்துக்குப் பஸ்ஸில் போனோம். பஸ்ஸிலிருந்து இறங்கி பாய் மரப் படகில் சுமார் அரை மணி நேரம் பிரயாணம் செய்து பேட் துவாரகா அடைந்தோம். மாலை வேலையின் மஞ்சள் வெய்யிலில் அந்தப் படகில் கடலில் செல்வது ஓர் ஆனந்தமான அனுபவந்தான்!

பேட் துவாரகா மிகவும் அமைதியாய் இருக்கிறது. நீண்ட குறுகலான தெருக்களும் உயரமான கட்டிடங்களும் உள்ளன. கண்ணனுடைய திருமாளிகையைக் கண்டோம். அங்கேயும் விக்ரக ஆராதனை நடக்கிறது. கண்ணனுடைய திருமாளிகையைச் சுற்றி பாமைக்கு ஒரு மாளிகையும், ராதிகாவுக்கு ஒரு மாளிகையும் ருக்மிணிக்கு ஒரு மாளிகையும் இருக்கின்றன. எல்லா மாளிகைக்கும் நுழை வாயில்கள் ஒரே ஹாலிலிருந்தே இருந்தாலும், வெளியிலிருந்து பார்க்கும்போது உப்பரிகையுடன் கூடிய சாளரங்கள் — அரண்மனைகள் தனித் தனியே தெரிகின்றன.

மாலையில் கற்பூர ஹாரத்தி ஆனவுடன் உற்சவ மூர்த்தியை எழுந்தருளப் பண்ணிக்கொண்டு முதலில் ருக்மிணிதேவி அரண்மனைக்கும். பிறகு பாமா, ராதை அரண்மனைக்கும் செல்கிறார்கள். ஒவ்வொரு திருமாளிகையிலும் பத்து நிமிடம் வைத்திருந்துவிட்டுப் பிறகு யதாஸ்தானத்தில் எழுந்தருளப் பண்ணி விடுகிறார்கள். இப்போதே இந்த மாதிரி செய்கிறார்களே அவர் இருந்தபோது மூவரிடத்திலும் என்ன பாடு பட்டிருப்பார்! என்று நினைக்கும்போது சிரிப்புத்தான் வருகிறது. அங்கே குசேலரும் கண்ணனும் சந்தித்த இடத்தையும் காப்பாற்றி வைத்திருக்கிறார்கள். அங்கே ஒருவர் உட்கார்ந்து கொண்டு 'குசேலோபாக்யானம்' கதை சொல்லிக் கொண்டிருக்கிறார். பின்னால் பெரிய ''கோ''சாலை இருக்கிறது. முன்னால் பெரிய துவஜஸ்தம்பம்.

துவாபரயுகம் முடிந்து ஸ்ரீ கண்ணன் வைகுந்தம் எழுந்தருளும் சமயம் வந்ததும் விதுரரை அழைத்து ''நான் போக வேண்டிய சமயம் வந்து விட்டது. நான் போனவுடன் இந்தத் துவாரகா பட்டணம் கடலில் மூழ்கி விடும். ஆனால் நான் இருந்த இடம் மட்டும் மூழ்காது'' என்றாராம். ஆகையால்தான் இந்த ''பேட் துவாரகா'' என்ற திட்டுப் போன்ற இடம் ஏற்பட்டுள்ளது என்று ஸ்தல புராணம் கூறுகிறது. இங்கு வசிக்கும் இடைச் சாதியினர் உடை நமக்கு அந்த நாளைய கோபி காஸ்திரீகளையே நினை ஊட்டுகின்றன.

திருத்தலம் கண்டேன்!

பத்மாசக்ரவர்த்தி


பத்திரிகைகள்
எதிர்க்கட்சிகள்
எதிர்ப்புணர்ச்சி


தமிழ்நாட்டில்
திட்டங்கள் அமுலாக்கம்
குறித்து பிரதமர்
நேரில் வந்து
அறிந்து கொள்ள
விரும்பியுள்ளார்!
மக்கள்


?

# ஐயோ பாவம், ஆர். வி.!

ஆர். வி. யை நினைத்தாலே பரிதாபமாக இருக்கிறது. பேரர் பாண்ட் திட்டம் கறுப்புப்பணத்தை ஒற்றி எடுத்துவிடும் என்று நம்பி அமல்படுத்தினார். ஏமாற்றம் தான் ஏற்பட்டது. அதைவிடப் பெரிய ஏமாற்றம் ஒன்றும் காத்திருந்தது.

ஒரு பொருளாதாரத் திட்டத்தை அமல்படுத்துவதில் அமைச்சரகத்துக் கூட்டுப்பொறுப்பு உண்டு. ஆனால் பிரதமரோ இதில் தமக்கு ஒன்றும் சம்பந்தமில்லை என்பதுபோல் பேசிவிட்டார். 'பொருளாதார நிபுணர்கள் இது நன்மை பயக்கும் என்று சொன்னார்கள்; சரி என்றேன்' என்று கூறி நழுவிக் கொண்டார். இப்படிக் கைவிடப்பட்டது ஆர். வி. க்குப் பெரிய அடி. அப்புறமாவது மனுஷன் புரிந்து கொள்ள வேண்டாமோ?

இ. காங்கிரசின் கொள்கைகளில் அடிப்படை மாற்றங்கள் ஏற்பட்டாலன்றித் தேசப் பொருளாதாரம் முன்னேற முடியாது என்பதும் அப்படி கொள்கை மாற்றங்களைச் செய்யத் தடையாக இருப்பது சுயநல அரசியலே என்பதும் ஆர்.வி.க்குப் புரியவேயில்லை! மனுஷன் போகாத ஊருக்கு வழி சொன்னார்.

'தனியார் துறையில் நஷ்டமடைந்து கொண்டிருக்கும் நிறுவனங்களை அரசு ஏற்று நடத்துவது என்ற 'கொள்கை சரியானதல்ல; அதனால் அரசுக்கு ஏகப்பட்ட கஷ்ட நஷ்டங்கள்' என்று கசப்பான உண்மையைப் பேசினார். அதுவும் எங்கே? நாடாளுமன்றத்தில்! இப்படிச் சொன்னால் மாருதிவிவகாரம் பற்றிக் கேள்வி பிறக்காதோ? யோசனை வேண்டாமோ மனுஷனுக்கு? போதாக்குறைக்கு 'இது என்ன பாணி சோஷலிஸமோ விளங்கவே இல்லை' என்று நையாண்டி செய்தார் ஆர். வி. —இங்கிதமே தெரியாமல்!

நோயுற்ற நிறுவனமாக நடத்துவதே நேர்மையற்ற நிர்வாகிகளுக்குப் பெரும் ஆதாயமாக முடியும் வகையில் நமது சோஷலிஸ சித்தாந்த அரசின் கொள்கைகள் வகுக்கப்பட்டுள்ளன என்பது ஆர். விக்கு நிஜமாகவே தெரியாதா? நம்ப முடியவில்லை!

தங்கள் சுயலாபம் மட்டுமே பெரும் புண்ணியம் எனவும் தொழில் வர்த்தக நிறுவனங்களில் லாபம் என்ற கருத்து நிலவுவதே மகாபாபம் என்றும் சித்தாந்தம் உடைய நமது அரசியல்வாதிகள், தொழிலாளர்களுக்கு உதவுவதாக சோஷலிஸம் பேசி நோயுற்ற தொழிலகங்களை அரசுடைமையாக்குவார்கள்; அரசு அடையும் நஷ்டங்கள் தங்கள் தலையில்தான் விழுகிறது என்பதை அறியாத அப்பாவி மக்கள், அத்தனை சுமைகளையும் பொறுமையுடன் ஏற்று மேன்மேலும் வரிகளைச் செலுத்திக் கொண்டேயிருப்பார்கள்! இந்த அடிப்படையில்தானே அரசுத் துறை நிறுவனங்களிலும் பெரும்பாலானவை கோடிக்கணக்கில் நஷ்டம் அடைந்து வருகின்றன!

பாவம் ஆர். வி.! அண்மையில் அந்துலே விவகாரத்திலும் பிரதமரால் அம்போ என்று கைவிடப்பட்டிருக்கிறார்! அந்துலேயோ பிரதமரோ தவறேதும் செய்துவிடவில்லை என்று அரசு சார்பில் நாடாளுமன்றத்தில் வாதாடவேண்டிய நிர்ப்பந்தத்துக்கு உள்ளானார் ஆர். வி. மறுத்திருக்கலாம். அதற்குரிய நெஞ்சுறுதி இல்லாமல் போய்விட்டது. பரிதாபம்.

இப்போது ராஜீவ் வேறுவிதமாய்த் தீர்மானித்து விட்டதால் அந்துலேயின் ராஜினாமா கடிதத்தைக் கேட்டுவாங்கிக் கொண்டுவிட்டார் பிரதமர். நாளையோ மறுநாளோ அந்துலேயின் பதவி பறிக்கப்படும். ஜனநாயக மரபுகளை மீண்டும் ஒதுக்கி மறுபடியும் மேலிட நியமனமாகப் புதிய முதல்வர் பதவிக்கு வருவார். அப்படியானால் அந்துலே சார்பில் அவர் நடத்தையை நியாயப்படுத்தி ஆர். வி. நாடாளுமன்றத்தில் வாதாடியதெல்லாம் என்ன ஆவது?

பலிகடா ஆகிவிட்டார் ஆர். வி. அடுத்த பட்ஜெட்டைச் சமர்ப்பிப்போம் என்ற நம்பிக்கை அவருக்கே இல்லாததில் வியப்பில்லை.

ஒவ்வொரு நிதி அமைச்சரும் ஒன்றரை பட்ஜெட்டுக்கு மேல் சமர்ப்பிக்காமல் கவனித்துக் கொள்வதைவிட தேசத்தின் துரிதமான பொருளாதார பின்னேற்றத்துக்குச் சிறந்த மார்க்கம் வேறு என்ன இருக்க முடியும்!

1981 செப்டம்பர் 20

துன்மதி புரட்டாசி 4

மலர்: 40 இதழ்: 8



**கல்கி**



தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

ராணி ஒரு குழந்தையைத் தனதாக்கிக் கொண்டாள். சூழ்ச்சி அரசர்க்குச் சீக்கிரம் தெரிந்து விட்டது. குழந்தையைத் தனது போலவே வளர்த்து வந்தாலும் பட்டத்தை அதற்குக் கொடுக்கவில்லை!

பர்ரா டாவின் 12-12-1616 கடிதம்

## 25

ஸ்ரீரங்கன் தனது முயற்சியில் தைரியம் அடைந்தான். ''உங்களை வைத்து இந்த நாட்டைச் சூதாடலாம் என்று பார்க்கிறாள் ரத்னவளி'' என்றான்.

''என்னைங்களா?'' என்றாள் சுவர்ணமுகி. ''என்னை வச்சு என்ன செய்ய முடியும்?'' என்று ஆச்சரியத்துடன் கேட்டாள்.

ஸ்ரீரங்கன் முகத்தில் கலக்கம். இன்னும் இந்தப் பெண் கொச்சை மொழியை விடவில்லையே! இன்னும் தன்னை மலை இனப் பெண்ணாகக் காட்டிக் கொள்கிறாளே என்று நினைத்தான்.

இருந்தாலும் தன் நம்பிக்கையை விடாமல், ''உங்களை அவளுக்குத் தெரிந்த ஆண் பிள்ளைக்குக் கல்யாணம் கட்டிக் கொடுப்பாள். நீங்கள்தான் சிங்காதனத்துக்கு உரியவர்கள் என்று பிரகடனம் பண்ணித் தன் பலத்துக்கு ஆள் சேர்ப்பாள்...'' என்றான்.

சுவர்ணமுகி புடவையைக் கீழே வைத்தாள். வலது கையை எடுத்து அதிசயம் போல் முகவாயில் வைத்தாள்.

''அப்படிச் செய்து விட்டால் நாளைக்கு ராஜ்யமும் அதிகாரமும் அவள் கைக்கு வந்த மாதிரி! இஷ்டப்படி வாழுவாள்'' என்று முடித்தான் ஸ்ரீரங்கன்.

''என்னை வச்சு இத்தனையும் முடியுங்களா?'' என்றாள் சுவர்ணமுகி.

''முடியும்.''

''நான் மலை ஜாதிப் பெண் ஆச்சே!'' என்றாள் அவள்.

ஸ்ரீரங்கன் முகத்தில் முறுவல் தோன்றி அழிந்தது.

சுவர்ணமுகி வெகுளித்தனமாகக் குனிந்து அவன் பேச்சில் சுவாரஸ்யமில்லாதது போல் தனது நடிப்பை நீடித்தாள்.

ஸ்ரீரங்கன் முகத்தில் இன்னும் குழப்பம் இருந்தது. கூடவே தீவிரமாக ஆலோசனை இடுவதும் தெரிந்தது. சுவர்ணமுகியின் கண்களைக் கனிவாகப் பார்த்தான்.

பிறகு, ''இப்போது ரத்னவளிக்கு இருக்கும் ஆத்திரத்தில் நீங்கள் உண்மையில் இளவரசி இல்லை என்று தெரிந்தால் கூட உங்களையே இளவரசி என்று பிரகடனம் செய்தாலும் செய்வாள்'' என்றான்.

அலைகளை ஒரு கணம் நிறுத்தினாள் சுவர்ணமுகி. அவன் சொன்னது அவளைச் சிறிது பாதித்திருந்தது.

''அப்படி முடியுங்களா?'' என்று கேட்டாள்.

''ஏன், திருவேங்கடராஜாவின் பத்தினி செய்யவில்லையா?'' என்று கேட்டான் ஸ்ரீரங்கன்.

''என்ன செய்தாள்?''

''அவள் கர்ப்பம் தரித்ததாகப் பொய் சொல்லி ஒரு நாதியின் மகனைத் தன் குழந்தை என்று சொல்லவில்லையா? அதிலிருந்துதானே நாட்டில் பட்டத்துக்குப் பூசல்கள் ஏற்பட ஆரம்பித்தன'' என்றான் ஸ்ரீரங்கன்.

சுவர்ணமுகி யோசித்தாள்.

திருவேங்கடராஜாவின் பத்னிதான் அந்த ஏமாற்று வேலையைச் செய்தவள். ஆனால் ராஜாவுக்கு அது நன்றாகத் தெரியும். உரிய வேளை வந்தபோது பட்டத்தை அந்த 'ஏமாற்றுப்' பிள்ளைக்குக் கொடுக்காமல் தமது உறவினர் பிள்ளைக்குக் கொடுத்தார்.

அந்தப் பிள்ளையின் வம்சத்தில் வந்தவள்தான் சுவர்ணமுகியும்.

பட்டம் பெறுவதற்காக இப்படிப் பலர் செயல்களை மேற்கொள்கிறார்கள் என்பதைச் சுவர்ணமுகி ஏற்கனவே அறிந்திருக்கிறாள்.



# சுவர்ணமுகி

## ஸ்ரீவேணுகோபாலன்



"ஐயா, என்னைக் கூட அப்படிச் செய்வாங்களா?" என்று கலவரத்துடன் கேட்டாள் அவள்.

"ஏன், அவசியம் வந்தால் நிச்சயம் செய்வார்கள்" என்றான் ஸ்ரீரங்கன்.

"நான் கேவலம் மலை இனப் பெண்ணுச்சே?"

"அதனால் என்ன? உங்களுக்கு ராஜ வம்சத்து மூக்கும் முழியும் இருக்கின்றன. அதை உபயோகப்படுத்தியே, நீங்கள்தான் ராஜகுமாரி என்று சொன்னாலும் சொல்வார்கள். எல்லாம் அந்த நேரத்து அவசியத்தைப் பொறுத்திருக்கிறது."

ஸ்ரீரங்கன் அவளைச் சற்று விசேஷமாகக் கவனித்தான்.

சுவர்ணமுகி சிறிது யோசனை செய்கிறாள் என்பதே அவனுக்கு முறுவலைக் கொடுத்தது.

யோசித்துக் கொண்டே சரப் புடவையைப் பிழிந்தாள். அதே நேரம் அவள் சிந்திக்கிறாள் என்பது நன்றாகத் தெரிந்தது.

ஸ்ரீரங்கன் நம்பிக்கையோடு காத்திருந்தான்.

சிறிது நாழிகைக்குப் பிறகு அவள் நிமிர்ந்து, "ஐயா, நான் மலை ஜாதிப் பொண்ணு! என்னைப் போட்டுச் சித்திரவதை பண்ணாதீங்க ஐயா!" என்றாள் இரக்கமாக.

"நீங்கள் இங்கே இருக்கிறவரை சித்திரவதைதான் செய்வார்கள். நீங்கள் பொய் சொல்கிறீர்கள் என்று அவர்கள் நினைக்கிறார்கள்" என்றான் ஸ்ரீரங்கன்.

"பொய் சொல்லி எனக்கு என்ன ஆகப் போகுது? நிஜத்தைத்தான் சொல்றேன் ஐயா! என்னை விட்டுடச் சொல்லுங்க! உங்களுக்குக் கோடிப் புண்ணியம் உண்டு" என்றாள் அவள்.

"நல்லது" என்று சொல்லிச் சுற்றிலும் ஒரு முறை பார்த்தான் அவன். பிறகு தணிவான குரலில், "இதைத்தான் உங்களிடமிருந்து எதிர்பார்த்தேன். நீங்கள் நினைத்தால் உங்களை இங்கே விட்டு வேறு இடத்துக்குப் போக வழி செய்கிறேன். சம்மதமா?" என்றான் அவன்.

அவனை ஆழமாகப் பார்த்தாள் அவள்.

"ஐயா, உங்களை மட்டும் எப்படி நம்பறது?" என்றாள் சந்தேகம் தொனிக்க.

"நீங்கள் கேட்பது நியாயம்தான்! ஒரு ரகசியம் சொல்கிறேன். இந்த ரத்னவளியும், கிருஷ்ணவேணியும் உன்னை வைத்துச் சூதாட்டம் ஆடலாம் என்று பார்க்கிறார்கள். இதில் என்னையும் ஈடுபடும்படி நம்பகமாக அழைத்திருக்கிறார்கள். இது எனக்குப் பிடிக்கவில்லை. நான் நல்ல குலத்தில் பிறந்தவன். நன்றாகக் கற்று அறிந்தவன். கூடியமட்டிலும் நல்லவனாகவே வாழ விரும்புகிறேன். இந்த நாட்டைத் தோற்றுவித்த வித்யாரண்யர் என் குரு! அவர் வாழ்ந்த நெறிப்படி நானும் வாழ விரும்புகிறேன். எனவே, இந்தத் தேவதாசிப் பெண் மணிகளின் தந்திரங்களுக்கு நான் உட்பட விரும்பவில்லை. உங்களுக்கு ஒரு திட்டம் வைத்திருக்கிறேன்" என்று நிறுத்தினான் அவன்.

அப்போது கெல்லி வியர்வை பிழிந்து விழ, விறகுக் கட்டு ஒன்றைக் கொண்டு வந்து அங்கே போட்டாள்.

களைப்போடு ஸ்ஸ்ஸ்ஸ்ஸ்ஸா என்று சொல்லிக் கீழே உட்கார்ந்து முந்தானைத் தலைப்பால் தன்னை விசிறிக் கொண்டாள்.

சுவர்ணமுகி கேள்வியுடன் அவனைப் பார்க்க அவன் தொடர்ந்தான்:

"இன்று இரவு உங்கள் அறையைத் திறந்து வைக்கிறேன். நீங்கள் நள்ளிரவுக்கு மேல் தப்பித்து வெளியே போங்கள். வெளியே ஒரு நாகலிங்க மரம் இருக்கிறதே அதன் அடியில் இரண்டு வீரர்கள் காத்திருப்பார்கள். நீங்கள் வந்ததும் உங்களைக் குதிரைகளில் ஏற்றிக் கொண்டு பொழுது விடிவதற்குள் வேறு இடம் கொண்டு போய் விடுவார்கள்."

சுவர்ணமுகி கண் கொட்டாமல் அவனையே பார்த்தாள். "எங்கே கொண்டு போவாங்க?" என்று கேட்டாள் கலவரத்துடன்.

"ஹனுமன்பள்ளி என்கிற ஊர்லே ஒரு மாளிகையிலே கொண்டு விடுவாங்க!" என்றான் ஸ்ரீரங்கன்.

"ஹுக்கும்! இங்கே விட்டு அங்கே போய் மாட்டிக்கச் சொல்றீங்களா?" என்று மூக்கைச் சுளித்தாள் சுவர்ணமுகி.

"சத்தியமாக நீங்கள் அங்கே மாட்டிக் கொள்ள மாட்டீர்கள். அது ஒரு நவரத்னச் செட்டியார் மாளிகை. நீங்கள்

இஷ்டப் பட்டால் தங்கலாம். எல்லா வசதிகளும் உண்டு. இஷ்டப்படாவிட்டால் காட்டுக்கே போய் விடலாம்.''

''நாங்க காட்டுக்குள்ளேதான்போவோம். எங்கேயும் இருக்க மாட்டோம்'' என்றாள் சுவர்ணமுகி துடிப்போடு.

''எனக்கு ஆட்சேபணை இல்லை. எனக்கு ஒரு பயம். நீங்கள் தப்பிவிட்டீர்கள் என்று தெரிந்து ரத்னவலி மீண்டும் பட்டாளத்தோடு உங்களைப் பிடிக்க வந்துவிட்டால்...''

சுவர்ணமுகியின் முகம் அதைக் கேட்டதும் நிழலிட்டது.

''அதனால்தான் சொல்கிறேன். நீங்கள் அந்த நவரத்னச் செட்டியார் மாளிகையிலேயே இருக்கலாம். விருப்பம் இருக்கிற வரை இருக்கலாம். சிறிது காலம் இருந்துவிட்டுப் பிறகு, உங்கள் காட்டுக்கே போவதானாலும் போகலாம்'' என்றான் ஸ்ரீரங்கன்.

சுவர்ணமுகி முந்தானையைத் திருகிக் கொண்டு அவனைப் பார்த்தாள். இதமான, நன்றி நிறைந்த பார்வை அது. புரியாத வசீகரங்களோடு குளிர்ச்சி வீசியது அது. எதிராளியிடம் கள்ளம் இருந்தால் அதை ஒழித்துவிடும் பார்வை.

ஸ்ரீரங்கன் அதன் வீச்சில் தாக்குதலாகி, சிறிது நடுங்குவதை அறிந்து கொண்டாள்.

''ஐயாவே, இவ்வளவெல்லாம் எங்களுக்கு உதவணும்னு நினைக்கிறீங்களே, காரணம் என்ன?'' என்றாள் ஆதங்கத்தோடு.

இந்தக் கேள்வியை அவன் எதிர்பார்க்கவில்லை. உடனே அவன் பதில் சொல்ல முடியவில்லை. பிறகு சமாளித்து.

''உதவி செய்யச் சந்தர்ப்பம் கிடைத்தது செய்கிறேன். இந்தச் சந்தர்ப்பம் தானாக ஏற்பட்டதால் செய்கிறேன். இல்லாவிடில் நிச்சயம் மாட்டேன்'' என்று சொன்னான் அவன்.




''சரி, உங்களை மட்டும் எப்படி நம்பறது?'' என்று கேட்டாள் அவள்.

ஸ்ரீரங்கன் லேசாகச் சிரித்தான். ''எங்கேயாவது நம்பிக்கை வைத்துத்தானே ஆக வேண்டும்'' என்றான்.

''அதுக்கு உங்கமேலே ஏன் வைக்கணுங்க? நீங்க யாரு?'' என்றாள் துணிச்சலாக.

''நானா?'' என்று இழுத்தான் அவன். ''நிச்சயம் தெரிய வேண்டுமா?''

''தெரிஞ்சா நல்லதில்லே?'' என்றாள் அவள்.

''சொல்றேன், கேளுங்கள்!'' என்று தொண்டையைக் கனைத்து அவளைப் புதுப் பிரகாசத்துடன் பார்த்தான். ''வேங்கட ராஜா தெரியுமில்லையா?''

''தெரியும். நம்ம மகாராஜா!''

''அவருடைய சகோதரி மகன் நான்! ஸ்ரீரங்கன் என்று பெயர்.''

அவள் கால் விரல்கள் கீழே பலமாக அழுந்தின. மற்றபடி மனத்தில் ஏற்பட்ட உணர்ச்சியை அவள் வெளியே காண்பிக்கவில்லை.

கேள்விப்பட்ட ஞாபகம் இருக்கிறது. ரங்கப்பாவுடன் அரண்மனை விழாக்களுக்குப் போன பல முறைகளில் ராஜ குடும்பத்தையும், உறவினர்களையும் அவள் பார்த்திருக்கிறாள். இன்னின்னார் யார் யார் என்று மற்றவர்கள் பேசுவதை அவள் கூர்ந்து கவனித்திருக்கிறாள். வேங்கடருக்கு ஒரு மருமகன் ஸ்ரீரங்கன் என்ற பெயரில் இருப்பது தெரியும். ஸ்ரீரங்கன் என்ற பெயரை அவளால் மறக்க முடியாது. காரணம் அவளது தந்தையின் பெயரும் ஸ்ரீரங்கன்தான் (இம்மாடி ஸ்ரீரங்கநாத ராஜா)

இப்போதுதான் சுவர்ணமுகிக்கு மற்றொன்று புரிந்தது. ஸ்ரீரங்கனிடம் சில சாயல்கள் வேங்கடராஜா போலவே இருந்தன.

''என்ன இன்னும் நம்பிக்கை இல்லையா?'' என்றான் அவன்.

சுவர்ணமுகிக்குச் சங்கடமாக இருந்தது. நல்லது. இவனை நம்பலாமா? இவன் நோக்கம் என்னதாக இருக்கும்? உதவி செய்ய வேண்டும் என்ற நல்ல குறிக்கோள் தானா?

இவனே திட்டம் போட்டு வேறு ஏதாவது இக்கட்டில் என்னைச் சிக்கவைத்து விடுவானோ?

எல்லோரும் சுயநலத்தையே நாடும் இந்தத் தருணத்தில் இவன் மட்டும் உயர்வு நோக்கம் வைத்திருக்கிறான் என்பதை எப்படி நம்புவது?

''யோசனையே வேண்டாம். ஒத்துக்கொள்ளுங்கள்'' என்றான் ஸ்ரீரங்கன்.

''ஐயா!'' என்றாள் அவள். ''எனக்குப் பயமா இருக்குங்க. நான் எங்கேயும் வரலேங்க'' என்று முடித்தாள் நிர்த்தாட்சண்யத்துடன்.

ஸ்ரீரங்கன் அசைவற்று நின்றான்.

''இல்லே....'' என்று அவன் என்னவோ சொல்ல வாயெடுக்க,

''வேண்டாங்க, நான் வரலேங்க!'' என்றாள் அவள்.

ஸ்ரீரங்கன் தலையைக் குனிந்தவாறு திரும்பினான். கனமான நடைகளைப் போட்டு வீட்டுக்குள் நடந்தான்.

அவன் போன பிறகு சுவர்ணமுகி உணர்வில்லாமல் வேலைகளைச் செய்தாள். சிறிது நேரத்தில் கிருஷ்ணவேணி வீட்டுக்குத் திரும்பினாள். சுவர்ணமுகியின் வேலைகளில் குறை கண்டுபிடித்து ஏகமாகத் திட்டினாள். சிறிது நேரம் கிணற்றடியில் தூங்கிவிட்டிருந்த செல்வியை ஓங்கி முதுகில் அடித்தாள்.

இரவு வெகு நாழிகைக்குப் பிறகு அவள் உறங்க ஆரம்பித்தபோது உடம்பெங்கும் வலித்தது.

என்ன வேலை! என்ன உழைப்பு!

சிறிது நேரம் கூட அவகாசம் கொடுக்காமல் ஓட ஓட விரட்டினாள் அந்த ராட்சசி.

கீழே தரையில் ஒரே விரிப்புத்தான். தரையின் மழைக் குளிர் அவள் மீது ஊர்ந்து ஏறியது. அதனால் ஏற்படும் துன்ப உணர்ச்சி அவளைத் துவட்ட.

தனது நிலையை உணர்ந்து அவள் வருந்த ஆரம்பித்தாள்.

கண்ணீர் மெள்ள அரும்பு போல் வெளி வந்தது.

மனத்தின் ஒரு பகுதி மெதுவாக இழிந்து தன் அவலத்தை நினைக்கும்போது,

மற்றொரு பகுதி வானத்தில் எட்டிப் பறந்து அந்த வீரனை நோக்கி ஓடியது.

முன்பு திடீரென்று காட்டுக்குள் வந்து குதித்தாரே!

அதே போல்இங்கேயும் வந்து குதிப்பாரா? என்னைக் காப்பாற்ற வருவாரா? அல்லது ஒரு பொருட்டாக என்னைக் கருதாமல் தம் வேலையைப் பார்த்துப் போய்விடுவாரா?

ஊஹூம்! மாட்டார்! அவர் அப்படிப் பட்டவர் இல்லை!

அவர் விழியிலேயே கண்ணியம் தெரிந்தது.

அது மட்டுமா?

நான் ஓரமாக வளைத்து ஒரு பார்வை பார்த்தேனே,

அதில் அவர்வசமாகச் சிக்கிக்கொண்டார் என்று நன்றாகத் தெரிந்து விட்டது.

என்னை விட்டுப் போகவே அவருக்கு இஷ்டமில்லை.

கீழே இறங்கிப் பாறைகள் வழியே மறையும்போது, என்னைப் பார்த்துக் கொண்டே போனார்.

அந்த இரவு வேளையும், காட்டுச் சூழ்நிலையும், குளிர்ச்சியான காற்றும், அவர் போகும் காட்சியை எப்படி ஒரு மறக்க முடியாத அனுபவமாகச் சித்திரித்துவிட்டன!

இப்போது நினைத்தாலும் மெய்மறக்கிறது.

இந்த நினைவுகளில் அவள்மிதந்து மெள்ளக் கண் அயர்ந்துவிட,

எவ்வளவு நாழிகை என்று அறியாத வேளையில் யாரோ அவள் கையை மெள்ள உலுக்கி விடக் கண்களைத் திடுக்கிட்டு விழித்தாள்.

அவளுக்குத் திகில் தந்த அந்த உருவம் யார்?

துள்ளி எழுந்தாள் அவள்.

அவள் முன் நின்றது ஸ்ரீரங்கன்!

(தொடரும்)



# ரசிகமணி ரசித்த மணிகள்

# டாக்டர் சுவாமிநாதய்யர்

**மீ.ப. சோமு**

டி.கே.சி. மிகவும் மதித்துப் போற்றிய பெரியோர்களில் ஒருவர் மகாமகோபாத்யாய டாக்டர் உ.வே. சுவாமிநாதய்யர் அவர்கள்.

வெளிச்சத்துக்கு வராமல் காலம் என்ற இருளிலேயே புதைந்து கிடந்த பல பழந் தமிழ்ச் சுவடிகளை வெளிக் கொணர்ந்து, தமிழர்கள் தங்கள் இலக்கிய வளத்தை எண்ணி எண்ணிப் பூரிப்படையும்படியான பெருமையைத் தமிழகத்துக்கு வழங்கிய அந்த முதுபெரும் புலவர் கோமானை வாயார மனமாரப் பாராட்டுவார் ரசிகமணி! சுவாமிநாதய்யர் அவர்களைப் பற்றிப் பேச ஆரம்பித்தாலே ரசிகமணிக்கு ஒரு களிப்பும் உல்லாசமும் பொங்கும், பேச்சிலே!

இதோ ஒரு கட்டுரை: 1935ல் டி.கே.சி. எழுதியது. கடந்த ஆகஸ்ட் 23ம் தேதி திருக்குற்றாலத்தில் தமிழக அரசு முன்னின்று பொறுப்பேற்று மிக விமரிசையாக நடத்திய ரசிகமணி நூற்றாண்டுத் தொடக்க விழாவிலே இந்தக் கட்டுரையும் அடங்கிய *"இதய ஒலி" என்ற ரசமான கட்டுரைத் தொகுப்பின் புதிய பதிப்பு வெளிவந்துள்ளது.

டாக்டர் சுவாமிநாதய்யர் அவர்களைப் பற்றிய டி.கே.சி.யின் அந்த உல்லாசமான கட்டுரையைப் பாருங்கள்:

எனது நண்பர் ஊரை விட்டு அமெரிக்காவுக்குப் போனார். போய்ச் சேர்ந்து சில நாள் ஆகவே, அவருக்கு வீட்டைப் பற்றி ஞாபகம் ஏற்பட்டு விட்டது. ஆயிரக் கணக்கான மைலுக்கு அப்பால் இருக்கிற பெண்டு பிள்ளைகள்தான் சதா கண்முன் நிற்பது. மனைவி, வீட்டு வேலையில் மூழ்கி, அரங்குக் கதவைத் திறக்கிறதும், அவசரமாய் ஓடி அடுப்பில் வைத்திருந்த சாமானை இறக்குகிறதும், அப்படியே கண் முன் வந்துவிடும். குழந்தைகள் விளையாடுகிறதையும், ஓடி வருகிறதையும் பார்த்து, கீழே எங்கே விழுந்து விடுமோ என்று பயந்து நாற்காலியை விட்டு எழுந்து அவசரமாய் நடந்து போவார். சொந்த ஊர், வீடு, பெண்டு பிள்ளைகள் நிதர்சனமான நனவு; உண்மையாக எதிரில்நிற்கும் நியூயார்க்கட்டடமும், டிராமிங் ரூமும், அமெரிக்கர்களும் — ஆண் பெண் எல்லாம்—கனவுதான். இந்த மனநிலையை ஆங்கிலேயர் அடிக்கடி நேரில் அனுபவித்து, அதை ஒரு நோய் என்று கண்டு, மருத்துவ சம்பிரதாயத்தை ஒட்டி 'ஹோம்-ஸிக்னஸ்' என்று அதற்கு ஆங்கிலத்தில் பெயரும் கொடுத்திருக்கிறார்கள்.

இது தூர தேசத்துக்குப் போனதால் வந்த காரியம். அதாவது இடம் பெயர்ந்து வாழ்கிறது. இதே போலக் காலம் பெயர்ந்து வாழ்கிறதும் உண்டு. திருவேட்டீசுவரன் பேட்டையில், 'தியாகராஜ விலாசத்தில்' நானது 1935ம் வருஷத்தில் இருந்து-கொண்டே, காலம் பெயர்ந்து ஐம்பதல்ல, நூறல்ல, ஆயிரம், இரண்டாயிரம், மூவாயிரம் வருஷத்துக்கு முன்னுள்ள பழைய காலங்களில் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள், மகாமகோபாத்யாய டாக்டர் சாமிநாதய்யர் அவர்கள்.

ஐயர் அவர்களுடைய ஆசிரியர் திரிசிரபுரம் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் இருந்த காலம் அறுபது வருஷத்துக்கு முன். அது தற்போதைய காலத்துக்குள்ளவளவோ வித்தியாசப்பட்டது. பிள்ளை அவர்கள் காலஞ் சென்று எத்தனையோ வருஷம் ஆகிவிட்டது தான். ஆனால் என்ன? மாணவர்களுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கிறதும் மாணவர் ஒருவர் தன் மனையாளை விட்டுத் தனியாய் இருந்ததனால் உண்டான பிரிவாற்றாமை நோயைக் கண்டு வருந்துவதும், அதற்குச் சிகிச்சை செய்வதும் (மாணவருக்குத் தெரியாமலே தகப்பனுக்கு எழுதி, மனையாளைக் கொண்டு வந்து விட ஏற்பாடு செய்ததும்) ஆசிரியர் சிவபூஜை செய்யும் போது மணி ஓசை கேட்கிறதும், புஷ்பத்தை எடுத்து அர்ச்சிக்கிறதும், நந்தவனத்தைத் தினம் போய்ச் சுற்றிப் பார்க்கிறதும், புதிதாய் வைத்த செடி முதல் முதலாகப் பூத்த செய்தியைத் தாம் கண்டு சொல்ல, ஆசிரியர் அப்படியே ஓடிவந்து பார்க்கிற



* கிடைக்குமிடம்: வானதி பதிப்பகம் சென்னை-17

தும் — இது போன்ற ஆர்வம் கலந்த எத்தனையோ காட்சிகளை இன்றைக்கு 'தியாக ராஜ விலாச'த்திலிருந்து பார்த்துக் கொண் டும், ஆனந்தித்துக் கொண்டும் இருக்கிறார்கள் ஐயர் அவர்கள்.

இதைவிட விசித்திரம் இரண்டாயிரம் வரு ஷத்துக்கு முன்னுள்ள புலவர்கள் செயலைக் கண்கொட்டாமல் பார்த்துக்கொண்டே இருக் கிறது! கபிலராகிய புலவர், வள்ளல் பாரிக்கு முன் வந்து, அங்குள்ள புலவர்களைப் பார்த்து ''அடடா! புலவர்களே! உங்கள் சரக்கு இவ் வளவுதானா? பாடுகிறதற்கு விஷயம் அப் படித் தரித்திரமாகவா போய் விட்டது? கொடையைப் பற்றிப் பாட வேண்டுமானால் ஒருவன்தானா உலகத்தில் உங்களுக்கு? கொடையெல்லாம் பாரியோடு அப்படியே நின்று போய்விட்டது? என்ன, உங்களுக்குத் தெரியாதா? உலகத்தை அளிப்பதற்கு மழை யும் இருக்கத்தானே செய்கிறது?'' என்று சொன்னதை இன்றைக்குத்தான் ஐயர் அவர்கள் முன் நின்று 'தியாகராஜ விலா ச'த்தில் மறுபடியும் விகடம் நடத்திக்கொண் டிருக்கிறார்.

''பாரி பாரி என்றுபல ஏத்தி
ஒருவற் புகழ்வர் செந்நாப் புலவர்!
பாரி ஒருவனும் அல்லன்—
மாரியும் உண்(டு) ஈண்(டு) உலகுபுரப்
பதுவே.'' —புறநானூறு

அதிகமான் இறந்து போகிறான். அவ னுடைய அன்புக்கும் ஆதரவுக்கும் ஆளா யிருந்துவந்த புலவர் அரிசில்கிழார், இதயம் நொந்து அலறுகிறார்: ''அட எமனே, என்ன காரியம் செய்து விட்டாயடா! இவ னைக் கொன்று லாபமா கட்டிக் கொண்டாய்? உனக்கு இரை வேண்டும் என்றால் இவனையா கொல்லுகிறது? ரொம்ப வாழ்ந்துபோனாய். இவன் உயிரோடு இருந்தால்தான் போரில் எத்தனையோ பேர் இவன் வில்லால் இறந்து போவார்களே. அத்தனை பேர் உயிரையும் நீ வயிறார உண்ணலாமே. அட பைத்தியமே! பைத்தியமே!!'' — இந்தத் தாங்க முடியாத துயரமும் அலறுதலும் இன்றைக்கும் நிகழ் கின்றன, ஐயர் அவர்களுடைய கலங்கிய கண்களுக்கு முன்!

நிகழ் காலத்தைக் கைகழுவ விட்டுவிட்டு, சென்ற காலத்தில் இப்படியெல்லாம் ஒட்டிப் பழகுவதோடு நிற்பதில்லை. எதிர் காலத்தில் நெருங்கிப் பழகிக் கொண்டு இருக்கிறதும் அவர்களுக்கு உண்டு.

நூறு அல்லது ஆயிரம் வருஷம் கழித்து தமிழ் நாட்டில் தமிழ் மக்கள் என்ன செய் கிறார்கள் என்று கண் பூத்துப் போக ஒரே பார்வையாய் அடிக்கடி பார்த்துக்கொண்டே இருக்கிறார்கள். அந்த வருங்கால உலகத்தில் அவர்கள் காணுகிற விஷயங்கள்:

தமிழைப் புறக்கணிக்கிறதில்லை. தமிழை அவமதிக்கிறதில்லை. தமிழ் படித்தவர்களைக் கடைக் கண்ணால் பார்த்துக் கண்ணடித்து நகையாடுவதில்லை. மற்றெந்தப் பாஷை யிலும் விடத் தங்கள் தமிழிலேயே மோகம். தமிழ்ப் புத்தகங்களே தங்கள் கைக்கு அலங்காரம், தமிழ்க் கல்வியே தங்கள் அறிவுக்கு அலங்காரம் என்று எக் களிப்போடு பேசுவார்கள்; பயந்துபோய், தொண்டைக் குழிக்குள் விழுங்கிப் பேச மாட்டார்கள். உலகத்திலுள்ள கலைகள் எல்லாம் தமிழில் புத்தக ரூபமாகவும் பத் திரிகைகள் மூலமாகவும் எங்கும் ஓடி ஆடி உலவுகின்றன. முக்கியமாக 'குலுங்கக் குலுங்க' என்ற தம்பூர் சுருதியோடு ஆற்று வரி, கானல்வரி, குன்றக் குரவை, பிள்ளைப் பாட்டு, திருவாசகம், குறவஞ்சிப் பாட்டுகள் தமிழ்ப் பதங்கள், இன்னும் எத்தனை எத் தனையோ தமிழ்ப் பாடல்கள் எல்லாம் ஒலித்து தமிழகம் இசையகமாய் மாறி, தமிழ் மக்கள் தங்களை மறந்து கிடக்கப் பார்க் கிறார்கள்.

ஆகவே, 'தியாகராஜ விலாச'த்துக்கு வந்து போய்க் கொண்டிருப்பவர்கள், சென்ற காலத்து ஆசாமிகளும், வருங் காலத்து ஆசாமிகளும்தான் — நாம் அல்ல!

---

## அமெரிக்க அனுபவம்!

ஆறு மாதத்தில் பல குழந்தைகளுக்கு கிடைக் காத சான்ஸ் ஆக அவளின் அமெரிக்கப் பய ணம் அமைந்தது. எனக்கும் அதுவே முதல் விமானப் பயணம், என் குழந்தைக்கும் அதுவே முதல் விமானப் பயணம்!

அமெரிக்காவில் ஒரு நாள் வெளியே சென்று திரும்பி வந்து கொண்டிருந்தோம். இவளும் நடந்தே வந்து கொண்டிருந்தாள். இவள் முன்னால் போக நாங்கள் பின்னால் வந்தோம். எங்கள் இருப்பிடக் கட்டிடம் வந்ததும் தானே அந்தப் படியின் அருகில் நின்று விட்டுத் திரும்பி எங்களைப் பார்த்து ''...ம்மா ...ம்மா'' என்று கட்டிடத்தைப் பார்த்துக் கையைக் காட்டினாள்!

எங்களுக்கு ஒரே ஆச்சரியம்! யார் இவளுக் குச் சொல்லிக் கொடுத்தார்கள், இதுதான் நம் வீடு என்று? ஒரே வியப்பு. அதோடு நில்லாமல் கட்டிடத்திற்குள் நுழைந்து நேரே எங்கள் கட்டிடப் பகுதி கதவிடம் சென்று அதைத் தட்ட ஆரம்பித்ததும் எங்களுக்கு சந் தோஷத்தில் கண்ணீரே வந்து விட்டது. எங்கு வெளியே சென்றாலும் இவளுக்கு, ''என்ன குதூகலமான குழந்தை! புத்திசாலிக் குழந்தை!'' என்று புகழ் மாலைதான்.

- ராஜேசுவரி நீலகண்டன்

# மின்னலடிக்கும் ஸூப்பர் ரின் வெண்மை...

...இதர, டிட்டர்ஜெண்ட் வில்லை, பார் எதனையும் மிஞ்சும் வெண்மை.

பார்வைக்கு தப்பவே தப்பாத வெண்மை உங்கள் துணிகளுக்கு—வேளை தவருத ஸூப்பர் ரின் சலவையின் வெண்மையே தனி.
இதர டிட்டர்ஜெண்ட் வில்லை, பார் எதனையும் மிஞ்சுவது ஸூப்பர் ரின் வெண்மை.
காரணம், மிகுந்த வெளுக்கும் சக்தி அடங்கியது ஸூப்பர் ரின்.

**நீங்களே கண்டுகொள்வீர்கள்**

இதை வெளுத்தது வேறுவித டிட்டர்ஜெண்ட பார்





இதை வெளுத்தது ஸூப்பர் ரின்




அதிக வெளுப்பூட்டும் சக்தி படைத்தது ஸூப்பர் ரின்.

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு



# சரவணா
## மாவரைக்கும் இயந்திரம்

சரவணா கிரைண்டர்கள்

- 4 பேரிங்குகளால் தயார் செய்யப்படுகிறது
- ஒரு வருட உத்திரவாதமுள்ளது
- பெரிய நகரங்களில் எங்களுடைய மாவரைக்கும் இயந்திரங்களுக்கு ஆயுட்கால இலவச சர்வீஸ் செய்து தரப்படுகிறது



*தயாரிப்பாளர்கள் :*

**சரவணா இன்ஜினீயரிங் டிரேடர்ஸ்**
கோயமுத்தூர் – 641002

ஸ்டாக்கிஸ்ட்ஸ் :

| | |
|---|---|
| NEETHA TRADING AGENCIES, BOMBAY - 14 | Phone: 440490 |
| V. G. PANEERDAS & CO., SION, BOMBAY - 22 | Phone: 474789 |
| TAMILNADU STORES, KAROLBAUGH, NEWDELHI - 5 | Phone: 562320 |
| KARTHIK ENTERPRISES, MADRAS - 28 | Phone: 71624 |

OSR

---

கேசத்தின் பராமரிப்புக்கு இரு தைலங்கள்

**மதுயஷ்டி தைலம்**

தலைமயிர் உதிர்வதை நிறுத்தி கேசத்தை அபரிமிதமாய் வளரச் செய்யும்

**நீலிபிருங்காமலகம்**

அகால நரையைப் போக்கி தலைமயிரை கருமையாக வளரச் செய்யும்

# லலிதா பார்மஸி

கும்பகோணம் (போன் : 123)

DRUG LICENCE No. 40/78

*( மத்திய அரசால் கட்டுத் தொகைக்கு அனுமதியளிக்கப்பட்டுள்ளது )*

எமது கீழ்க்கண்ட கிளைகளிலும் மருந்துகள் கிடைக்கும் :

60-B, கச்சேரி ரோடு, மைலாப்பூர், சென்னை-4 *(போன்: 73007)*
6, ரெங்கநாதன் தெரு, தி. நகர், சென்னை-17 *(போன்: 441454)*
81, வடக்கு ரத வீதி, சிதம்பரம்
52, மஹாதானத் தெரு, மாயவரம் *(போன்: 379)*

மற்றும் சிறந்த ஆயுர்வேத மருந்துகள் யாவும் கிடைக்கும்

அன்றென்னவோ ராஜம்மாளுக்குக்காலையில் படுக்கையை விட்டு எழவே மனம் வரவில்லை. உடலெல்லாம் மூட்டுக்கு மூட்டு ஆயிரமாயிரம் குண்டூசியைக் குத்துவது போல் வலியெடுத்தது. தொண்டைக்குள் யாரோ நெருஞ்சி முட்களைப் பரப்பியிருந்தார்கள். முதல் நாள் கோயிலுக்குப் போய் விட்டு வரும் வழியில் இலேசான மழைத்தூறலில் நனைந்ததால் ஜலதோஷம் பிடித்துக்கொண்டிருந்தது.

ஆனால் உடலை விட அவளுக்கு மனம்தான் மிகவும் சோர்ந்து போயிருந்தது. ஏற்கனவே அவளுக்குத் தன் பிள்ளைக்குப் பெண் எடுத்த இடத்தைப் பற்றி அவ்வளவாகத் திருப்தியிருக்கவில்லை. அவள் பிள்ளைக்கு என்ன குறை? ராஜாவாட்டம் மூக்கும் முழியுமாக இல்லையா? கைநிறையச் சம்பாதிப்பதில்தான் குறைச்சலா?

அவள் சம்பந்தி அதிர்ஷ்டக்காரர். இத்தனை சுளுவில் அவருக்கு ஓர் இன்ஜினியர் மாப்பிள்ளை எங்கே கிடைப்பான்? அவள் பிள்ளை விக வரதட்சிணை வாங்க வேண்டாம் என்று பிடிவாதமாகக் கூறிவிட்டான் என்றாலும் அவர் அதற்கு மாற்றாகச் சீர் வகையறாக்களாகவாவது செய்து நிரப்பியிருக்கலாம் இல்லையா? அதுவுமில்லை. வெறும் பத்துப் பவுன் நகை. ஏதோ பெயரளவுக்கு எவர்சில்வர் பாத்திரங்கள். திருமணமும் அதிக ஆடம்பரமின்றித்தான் நடந்தது.



# நாலுசுவர்களுக்குள் நம் சாம்ராஜ்யம்

அசுவதி

''இந்த விலைவாசியில் அவர்களும்தான் என்ன செய்வார்கள் அம்மா? இன்னும் அந்த மனிதர் மூன்று பெண்களைத் திருமணம் செய்வித்தாகணுமோ இல்லையோ?'' என்று அவள்பிள்ளை விசு வேறு மாமனாருக்குப் பரிந்து பேசியது அவளுக்கு எரிச்சலைக் கொடுத்தது.

தலையணையில் ஒருக்களித்துப் புரண்டபடி காதைக் கூர்மையாக்கிக் கொண்டாள் ராஜம்மாள். மோகனா குளித்து முடித்து ஈரத் தலைமயிரை நுனி முடிச்சிட்டபடி சமையலறைக்குள் நுழைவது தெரிந்தது. நல்ல சுறுசுறுப்பான பெண்தான் என்று ராஜம்மாளின் உள் மனம் *அவளையும் மீறி நினைத்தது.

''அம்மாவுக்கு உடம்பு சரியில்லை போலிருக்கிறது. ராத்திரி யெல்லாம் சன்னமாக இருமிக் கொண்டிருந்தார்கள்'' என்று மோகனா விசுவிடம் காப்பியைக் கொடுத்தபடி கூறுவது கேட்டது.

''ஓ! அப்படியா? நான் அயர்ந்து தூங்கி விட்டதால் தெரியவில்லை... இப்பவே அம்மாவைப் போய் விசாரிக்கிறேன்.''

''ஷ்... எழுப்பிவிடாதீர்கள். இப்பொழுது தான் கண்ணயர்ந்திருக்கிறார்கள். விழித்ததும் டாக்டரிடம் கூட்டிப் போகலாம்.''

மகனும் மருமகளும் தன்மீது மாறி மாறிச் சொரியும் பாச மழையை நினைத்து ஒரு விநாடி ராஜம்மாளுக்குப் புல்லரித்தது. ஆனால் மறு கணம் அவளுக்குள் ஒரு குரல் விழித்துக் கொண்டது. ''மகனுக்கு உன்மீது பாசம் இருப்பதென்னவோ நியாயம். சிறு வயதில் தந்தையை இழந்த அவனை வளர்த்து ஆளாக்க நீ பட்டிருக்கும் சிரமங்கள் அவனுக்குத் தெரியாததல்லவே! ஆனால், மருமகள்? அவளுக்கு உன்னிடம் பாசம் தோன்ற என்ன நியாயம் இருக்கிறது? அவள் உன்னிடம் அக்கறை வழிவது போல் நடந்து கொண்டால் அது பசப்பு—வெறும் வேடம். அவனைக் கைக்குள் போட்டுக் கொள்ளப் பார்க்கிறாள். இவளை நம்பாதே!''

''என்னம்மா, உனக்கு உடம்பு சரியில்லையா? நான் இதோ போய் டாக்டரைக் கூட்டி வரேன்.''

''ச்சு... எனக்கென்ன, வெறும் ஜல தோஷம்தான். சுக்குக் கஷாயம் இரண்டு வேளை குடித்தால் சரியாகிவிடும்.''

**எச்சரிக்கை**

கருத்தடை மாத்திரைகளைக் கருத்தின்றி விழுங்குவோருக்கு எச்சரிக்கை! ரத்தம், இருதயம், நரம்புகள் தொடர்பான நோய்களை இந்த மாத்திரைகள் உருவாக்கலாம்.

'சில காலம் சாப்பிட்ட பின் நிறுத்தி விடலாம்; வேறுவித கருத்தடை முறைகளைக் கையாளலாம்' என்று நினைத்தாலும் பிரயோஜனமில்லை. ஏற்கெனவே சாப்பிட்டதன் விளைவுகளைப் பிற்காலத்தில் அனுபவிக்க நேரலாம்:

அதிகமான ஆபத்து ஹார்ட் அட்டாக். அடுத்தாற்போல், ரத்தம் உறைதல்; பாரிசவாயு.

-நியூஸ்வீக்

''அப்போ கஷாயம் போடட்டுமா அம்மா'' என்று குறுக்கிட்டாள் மோகனா.

''நீ ஒண்ணும் போட வேணாம். எல்லாம் நானே போட்டுக்கிறேன்'' என்ற மாமியாரின் நிஷ்டூரமான பதிலைக் கேட்டு, முகம் வாடச் சமையலறையை நோக்கி மெல்லத் திரும்பினாள் மோகனா.

''ஆமா, இந்தக் கரிசனத்துக்கொண்ணும் குறைச்சல் இல்லை. பிறந்த வீட்டிலிருந்து ஒழுங்காகச் சீர் கொண்டு வரத் துப்பில்லை. கேக்கறவங்க முன்னாடி நானல்லவா நாக்கைப் பிடுங்கிக்க வேண்டியிருக்கு!'' மருமகள் காதில் விழ வேண்டும் என்றே சற்று உரக்க முணு முணுத்தாள். மோகனாவின் மோகன வதனம் வெயிலில் இட்ட அல்லிப் பூவாயிற்று. 'அம்மாவுக்கு 'மூட்'சரியில்லை' என்று ஒரு பெருமூச்சுடன் விசு வாசற்புறம் சென்றான்.

ஆமாம் ராஜம்மாளுக்கு 'மூட்' சரியில்லை தான். அதற்குக் காரணம் இருந்தது. அவளது ஒன்றுவிட்ட அக்கா காமாட்சி சில நாட்கள் முன் வந்திருந்தாள்.

''உன் பிள்ளை கல்யாணத்துக்கு வர முடியலே ராஜம். கோவிச்சுக்காதே. எனக்கு ஃப்ளூ வந்திட்டது.... ஆமா, விசு வரதட்சிணையே வேண்டாம்னுட்டானாமே! சீர் என்னென்ன செஞ்சிருக்கா, காட்டு பார்க்கலாம்.''

காமாட்சியின் ஒரே மகன் பாஸ்கரனுக்கு அதற்குச் சில மாதங்களுக்கு முன்னால்தான் திருமணமாகியது.

''என்ன பாத்திரம் கொடுத்திருக்காங்க, உன் நாட்டுப் பெண்ணுக்கு! ஒண்ணும் உருப்படியாவே இல்லையே!...எங்க வனிதாவுக்குக் கொடுத்திருக்கிற எவர்சில்வர் பாத்திரங்களை நீ பார்க்கணும்! வீடு கொள்ளலே. நாற்பது பவுனுக்கு நகை போட்டிருக்காளாக்கும்...''

ராஜம்மா மனம் கூசிக் குன்ற, ஏதோ தப்புச் செய்தவள் போல் பேச நாவெழாது அமர்ந்திருந்தாள்.

''என்னவோடியம்மா, நான் சொல்றேனென்னு கோவிச்சுக்காதே.. நீ கண்ணைத் திறந்திண்டே கிணற்றில் விழுந்துட்டே!''

வாஸ்தவம்தான். அவள் விசுவுக்கு என்ன குறை? காமாட்சியின் மகன் வெறும் டிப்ளொமாப் படித்து சூப்பர்வைசராக இருப்பவன். அவள் மகனோ பொறியியல் டிகிரி வாங்கினவன். இந்தச் சின்ன வயதிலேயே, உதவி எஞ்சினிராகப் பதவி வகிப்பவன். இன்னும் கூடக் காத்திருந்தால் அவனுக்குக் கண்டிப்பா பெரிய இடத்துப் பெண்ணாக வாய்த்திருக்கலாம்.

இந்தஎண்ணம் தோன்றியதிலிருந்து அவளுக்கு மோகனா மீது இனந்தெரியாத வெறுப்புத்தான் வந்தது. தன் பிள்ளையை மயக்க வந்த மோகினிப் பிசாசாகவே கருதினாள்.

''நான் என்ன செஞ்சாலும் உங்கம்மாவுக்குப் பிடிக்கல்லே. நானும் எவ்வளவோ முயற்சி பண்ணியாச்சு...எனக்குக் கொடுத்து வச்சது அவ்வளவுதான்.'' இரவில் படுக்கை அறையில் கணவனின் மார்பில் சாய்ந்தபடி மோகனா விம்மினாள்.



## சிவராத்திரி!

என்னுடைய 25வது வயதில் ஒரு அழகிய பெண் குழந்தைக்குத் தாயானேன்.

ஆனால் பிரசவத்திற்குப் பிறகு அன்றிரவு அவள் என்னைப் படுத்தியபாடு! அப்பப்பா! விடாமல் கத்தித் தீர்த்து விட்டாள். குளுகோஸ் தண்ணீரை மட்டும் சிறிதுசிறிதாக வாயில் விட்டோம். அப்படியும் அழுகை நிற்கவில்லை, பாவம் எனது அம்மா! அன்று அவளுக்குச் சிவராத்திரி!

அதற்கு அடுத்த நாளும் அப்படியே. தூங்கும் நேரம் போக மீத நேரமெல்லாம் ஒரே கத்தல் தான். பிறகு பசியினால் மிகவும் கதறுகிறதே என்று பாலைக் கலக்கிக்கொடுக்க, வந்தது வினை! பிறகு தாய்ப்பாலைக் குடிக்கவே மறுத்துவிட்டாள். அவ்வளவுதான் வீட்டில் ஒரே ஆர்ப்பாட்டம். ஆளுக்கு ஆள் எனக்கு அட்வைஸ் எப்படி குழந்தைக்குப் பால் கொடுப்பது என்று. நான் டாக்டர்தானா என்று எனக்கே சந்தேகம் வந்துவிட்டது.

-ராதிகா பாலகிருஷ்ணன்

''ஷ்... என்ன இது அசடாட்டம்!.... அம்மாவுக்கு ஒரே நாட்டுப் பெண். நிறைய சீர் செனத்தியோட வரலே என்கிற குறை இருக்கிறது. எனக்கும் தெரியாமல் இல்லே. ஆனால், அந்தக் குறை காலப் போக்கில் தேய்ஞ்சு மறைஞ்சிடும். அட்ஜெஸ்ட்பண்ணிக் கிட்டு இருக்கணும். என்னை வளர்த்து ஆளாக்கிய அவளை எதிர்த்துப் பேச முடியாது!''

''என்ன இது. நான் அப்படிச் சொன்னேனா? என்ன இருந்தாலும் உங்க கிட்ட அவங்களுக்குத்தானே முதல் உரிமை...''

''போகட்டும். இப்போ அதைப் பத்தி என்ன? இந்த நான்கு சுவர்களுக்குள் நம் சாம்ராஜ்யமே தனி. இங்கு நீதான் ராணி'' என்றபடி செல்லமாக அவள் கன்னத்தைக் கிள்ளினான். ''இன்னும் என்ன யோசனை என் ராணிக்கு?''

''அதுக்கில்லே... வந்து... நீங்க இனிமேல் அம்மா எதிரே என்னை எதற்கும் புகழாதீங்க, என்ன?''

''ஆகட்டும். அரசியின் உத்தரவு.''

''என்னிடம் ரொம்ப அக்கறை காட்டி நடந்துக்காதீங்க. வேண்டுமென்றே குற்றம் கண்டு பிடியுங்க!''

மறுநாள் விசு அலுவலகத்துக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்தான்.

''சே, என்ன இது, ஷர்ட்டில் பட்டன் கூட ஒழுங்கா இருக்கா இல்லையான்னு கவனிக்க முடியாம, அப்படி என்ன வேலே செஞ்சு கிழிக்கிறே? உத்தியோகத்துக்குப் போறது தட்டுக்கெட்டுப் போறதோ?'' விசு அங்கு வந்த மனைவி மீது சட்டையைக் கோபமாக வீசி எறிந்தான். மோகனா வந்த சிரிப்பை அடக்கிக்கொண்டு ரொம்பக் கலவரப்படுவதுபோல் முகத்தை வைத்துக் கொண்டு சட்டையை எடுத்துக் கொண்டு அகன்றாள்.

நாளொரு குறையும் பொழுதொரு குற்றமுமாக விசு மோகனாவிடம் கண்ட போது ராஜம்மாளுக்குச் சற்று மனத்தை என்னவோ செய்தது. திருமணமான சில மாதமாகத் தேனும் பாலுமாக இணைந்திருந்த அந்த இளம் சிட்டுக்களிடையே திடீரென்று ஏன் இப்படியொரு மனத்தாங்கல்! கடவுளே, அந்தக் குழந்தைகள் வாழ்க்கை குதூகலமாக அமையட்டும் என்று தாயுள்ளம் பிள்ளையாரப்பனை வேண்டிக்கொண்டது.

அவளுக்கும் ஒரு மாறுதல் தேவையாக இருந்தது. அதனால், இந்த மனக் குழப்பத்துக்கு ஒரு வழியேனும் பிறக்கலாம். சொல்லி வைத்தாற்போல் காமாட்சியிடமிருந்து அவளுக்கு லட்ச தீபம் பார்க்க வரும்படி அழைப்பு வந்தது. ஒரு வாரம் அவளுடன் தங்கி வருவதாகக் கூறிவிட்டு, திருவனந்தபுரத்துக்குப் புறப்பட்டு விட்டாள். விசு அவளை வண்டி ஏற்றி விட்டான்.

இரவு எட்டுமணியாகிவிட்டது. காமாட்சியின் மருமகள் இன்னும் அலுவலகத்திலிருந்து வரவில்லை.

''இவ்வளவு நேரம் எந்த பாங்க் வேலே செய்கிறது?''

''அதில்லே. அவள் முக்கால்வாசி நாள் அவளம்மா வீட்டுக்குப் போயிட்டுத்தான் வருவாள். சில நாளில் அங்கேயே தங்கிடுவா. ஊருக்குள் பிறந்தகமோன்னேனா?... இன்னிக்கு வருவாளோ மாட்டாளோ.''

''அப்ப இரவு சமையல் பூரா நீதான் செய்யணும்னு சொல்லு... நீ ஒண்ணும் சொல்லவில்லையா?''

''அவ, அவா வீட்டிலே செல்லப் பெண். நான் ஏதாவதுசொன்னா மாமியார் படுத்தறா என்று கண்ணைக் கசக்குவா. நமக்கெதுக்குப் பொல்லாப்பு?... ஏற்கனவே அவள் அம்மாவுக்கு அவர்கள் அந்தஸ்துக்கு நாங்கள் போறாது என்ற குறை.''

''அப்ப அவுங்க அந்தஸ்துக்குத் தகுந்தபடி மாப்பிள்ளை பார்த்திருக்கலாமே?''

''ஷ்! வனிதா வந்துட்டா... அவ காதிலே விழுந்து வைக்கப் போகிறது!''

ஆம். கேட்டீச்சிட, கணவன் பின்தொடர வனிதாதான் வந்து கொண்டிருந்தாள்.... ஊறுகாய் ஜாடிக்கு உயிர் கொடுத்தாற் போன்ற உடல் அமைப்பு. கழுத்து என்ற ஒரு உறுப்பை வைக்கக் கடவுள் மறந்திருக்க வேண்டும். மோட்டு நெற்றி. உருண்டை விழிகள். செல்வச் செழிப்பு தேவையற்ற இடங்களிலெல்லாம் சதையாகத் தொங்கியது. பாதி முதுகுகூட இறங்காத கோரத் தலைமயிர். நிறம் கூட மிக மிகச்சுமார்தான். ஒரு விநாடி ராஜம்மாளின் கண் முன் மோகனா வந்து போனாள்.

ராஜம்மாளைக் காமாட்சி அறிமுகம் செய்ததும், ஏதோ ஒரு பெயருக்கு இரண்டு வார்த்தை பேசிவிட்டு, கணவனுடன் மாடிக்குச் சென்று விட்டாள். அப்புறம் சாப்பாட்டு நேரத்தில்தான் இறங்கி வந்தாள்.

இதுவே மோகனாவாக இருந்தால், ''நமஸ்காரம் பண்ணுகிறேன் மாமி'' என்று எத்தனை பணிவாக வணங்குவாள்!... ஆனால், வனிதா மாடர்ன் கேர்ல் ஆச்சே! அதையெல்லாம் எதிர்பார்க்கலாமா?

வனிதா எட்டு மணிக்கு மேல் எழுந்து வந்து பல் தேய்த்து முடித்ததும், மாமியார் தயாராகக் கொடுத்த காப்பியை அருந்தி, தம்ளரை முற்றத்தில் போட்டுவிட்டு, குளிக்கச் சென்றாள். அப்புறம் அலுவலகம் செல்லும் வரை அவளது அலங்காரத்துக்குப் பொழுது சரியாக இருந்தது.

'ஹும்! காமாட்சிக்கு நல்ல தலைவிதி' என்று பெருமூச்சு விட்டாள் ராஜம்.

"ஏன் காமாட்சி, சமையலுக்கு ஓர் ஆளைப் போட்டுக்கக் கூடாது? ரெண்டு பேரும்தான் சம்பாதிக்கிறானே! நீ இப்படி மாடாக உழைச்சுத்தான் ஆகணுமா?''

''போட்டுக்கலாம்தான். ஆனா, நாம செய்கிற மாதிரி ஆகுமா? பாஸ்கரனுக்கு யார் செய்தாலும் என் கைச் சமையல் மாதிரி ருசிக்காது... யாருக்காக உழைக்கிறேன்?... என் குழந்தைகளுக்காகத்தானே?''

'இதென்ன கண்மூடித்தனமான பாசம்!- அடி பைத்தியக்காரி! அவர்கள் பணத்திமிரில் உன்னை வேலைக்காரியா நடத்துவதை நீ தெரிந்து கொள்ளவில்லையேடீ!' என்று ராஜம்மாளின் மனம் அரற்றியது.

இரண்டு நாள் சென்றது. மூன்றாம் நாள் நடுப் பகல் வாசலில் ஒரு படகுக் கார் வந்து நின்றது. பாஸ்கரனின் மாமனார்தான் வந்திருந்தார். காமாட்சி அவசர அவசரமாக ஆப்பிள் நறுக்கி வைத்து ஓவல் கரைத்து வைத்து அவரை உபசரித்தாள்.

அவர் அழுத்தலாக அதை ஏற்றுக் கொண்டு சுற்றி வளைக்காமல் விஷயத்துக்கு வந்தார். ''சங்குமுகம் கடற்கரைப் பகுதியில் ஒரு வசதியான பங்களா மலிவான விலைக்கு வந்துள்ளது. வனிதாவுக்கு அவள் சேமிப்பு நிதியில் முப்பதாயிரம் கடன் வாங்கலாம். பாக்கிக்கு மாப்பிள்ளை அவர் ஆபீசில் கடன் வாங்கலாமென்றிருக்கிறார். போதும் போதாதற்கு நானும் உதவுவேன்... எதற்குச் சொல்கிறேனென்றால், அந்த வீடு வனிதாவுக்கு ஆபீசுக்குப் பக்கமாக இருக்கிறது. அதோடு அவர்கள் சிறிசுகள். தனிக்குடித்தன ஆசை இருக்கத்தானே செய்யும்... என்ன நான் சொல்வது?''

### குழந்தை கொடுத்த அதிர்ஷ்டம்!

அன்று பம்பாய் ஜிம்கானாவில் திரு கிருபானந்த வாரியார் அவர்களுடைய கதையின் கடைசி நாள்! கதை முடிந்த உடன் 'எல்லோரும் ஒரு ரூபாய் நோட்டில் தங்கள் பெயர் விலாசம் எழுதித் தட்டில் போடுங்கள்! சீட்டுக் குலுக்கப் போகிறோம்' என்றதும் குழந்தை தினேஷ் பெயரை எழுதி ஒரு ரூபாயைத் தட்டில் போட்டார் அவனுடைய தந்தை! சீட்டுக் குலுக்கலில் அவனுக்கு முதல் பரிசு விழுந்தது என்று தெரிந்தபோது எங்களுக்கு ஏற்பட்ட ஆனந்தம் பேரானந்தம். திரு கிருபானந்த வாரியார் கையால் எனக்கு ஒரு புடவையும், எங்கள் இருவருக்கு நாசிக், பஞ்சவடி, சீரடிக்கு இலவசமாக ஒரு பயணமும் கிடைத்தன!

- லஷ்மி சங்கரன்



''பேஷாகத் தனிக் குடித்தனம் போகட்டும். நானா வேண்டாமென்கிறேன்? எனக்கு உடம்பில் தென்பிருக்கிறவரை உழக்கு அரிசியை வடித்துக்கொள்ள முடியாது என்பதில்லையே?''

''நீங்கள் தப்பாக நினைக்கக் கூடாது.''

''இதில் தப்பாக நினைக்க என்ன இருக்கிறது?''

அவர் போய்விட்டார்.

"காமு, அழறியா என்ன? உடம்பை என்ன செய்யறதும்மா?''

திடீரென்று காமாட்சி ராஜத்தைக் கட்டிக்கொண்டு கேவிக் கேவி அழுதாள்.

''என்னைப் பெற்ற தாயாக மதிச்ச என் மகன், தான் தனிக் குடித்தனம் போகப் போவதை என்னிடம் நேரில் சொல்லியிருந்தானானால், நான் எத்தனையோ பெருமைப்பட்டிருப்பேன். நானே ஆசீர்வாதம் பண்ணி அவர்களைக் குடித்தனம் வைத்திருப்பேனே... கோழை மாதிரி நான் பெற்ற மகன் மாமனார் முதுகுக்குப் பின்னால் மறைய, மூன்றாம் மனிதரான அவர் வந்து எனக்கு விஷயத்தைத் தெரிவிக்கும்படி ஆகிவிட்டதே!... அதுதான் எனக்கு ஆறவேயில்லை!''

ஆறாதுதான்! பாவம், காமாட்சி. அந்தத் தாயின் கண்ணீர் என்றுமே வற்றாது என்று நினைத்தபோது, ராஜம்மாளின் விழிகளும் சூல் கொண்ட மேகமாயின.

''நீ பாக்யசாலி ராஜம்! என்னைப் போல் புத்தி கெட்டதனமாக பணப் பகட்டில் மயங்கிப் பெற்ற மகனையே இழந்துவிட்டு நிற்கலை நீ!''

மறுநாள் ராஜம்மாள் ஊருக்குப் புறப்பட்டு விட்டாள்.

''அம்மா, நீ இல்லாமல் வீடு வீடாகவே இல்லையம்மா... நல்ல காலம், நீ வந்துட்டே. இல்லாவிட்டால் நானே அழைக்க வரணுமென்றிருந்தேன்... இவளைப் பார். நேற்றெல்லாம் தலை சுற்றலும் வாந்தியுமாக ஒரே படியாகக் கலவரப்படுத்தி விட்டாள். எனக்கு என்ன செய்யணுமென்றே தெரியவில்லை.''

''அடி, என் ராசாத்தி எனக்குப் பேரனைத் தரப்போறியாடீ?'' என்று மோகனாவைப் பாசம் பொங்க அணைத்துக்கொண்டு உச்சி முகர்ந்தாள்.

பேரன் பிறக்கப் போகும் மகிழ்ச்சிதான், அம்மாவுக்கு மருமகளிடமுள்ள மனத்தாங்கலை விரட்டி விட்டது என்றே மோகனாவும் விசுவும் நம்பினார்கள். காமாட்சி வீட்டுப் பயணம் அந்தத் திருப்பத்தைத் தந்தது என்பது அவர்களுக்குத் தெரிந்திருக்க வழியில்லையே!




## போட்டிக் கதை-3

அவர் அமைதியாகப் படுத்திருக்கிறார்.

கண்ணிமைகள் விரிந்து, பார்வை மட்டும் புறச் சூழல்களை வலம் வந்து கொண்டிருக்கிறது.

எல்லாமே பார்த்த முகங்கள், பழகிய முகங்கள். பழக்கத்தில் முதிர்ந்தவை. உறவில் கனிந்தவை. முளைவிட்டுக் கிளைவிட்டுப் படர்ந்திருந்தவை.

இவ்வளவு பேர்களா வந்திருக்கிறார்கள்!

தம் முடிவு அவருக்குத் தெரிந்திருக்கிறது. அறுபது வயதில் தாம் பெற்ற ஞானம் நினைவுக்கு வருகிறது.

உலகத்தின் எரிமலைக் குழம்பும், காட்டாற்றுப் பகுதியும், உப்புக் கடலும், பாறைப் படிவங்களும் நிரம்பிய பகுதியைப் பற்றியே படித்துத் தன் உணர்வுகளில் அவற்றின் சாயல்களைப் படியவைத்து அதன் விளைவாக ஓர் ஒதுக்கத்தைத் தமக்குத் தாமே ஏற்படுத்திக் கொண்டவர். தாம் வாழ்ந்து வந்த வாழ்க்கையில் இதுவரை பார்க்காததை, அதன் மறைபொருளை, தத்துவத்தைப் படிக்கஆரம்பித்ததே அறுபது வயதில்தான்.

அப்படிப் படிக்க ஆரம்பித்துத் துளிர் விட்ட ஞானம் துரித கதியில் முற்றி அதன் சூடு தாங்காமல் துவண்டு இரண்டே ஆண்டுகளில் கொஞ்சம் கொஞ்சமாகச் சரிந்து இப்போது நாட்களை எண்ணிக் கொண்டிருக்கிறார்.

''அப்பா! வாயைத் திறங்க....'' — அவருடைய இரண்டாவது பெண் காயத்ரி. கணவனோடு வடக்கே வெகு தொலைவில் இருந்தாள்.

'உங்க எல்லோருடைய அன்பும் பாசமும் சாதிக்க முடியாததையா இந்த மருந்து சாதிக்கப் போகிறது? இது என்னோட கடைசி அத்தியாயம்மா....'

என்னென்னவோ சொல்லத் தோன்றுகிறது. முடியவில்லையே!

சேலைத் தலைப்பால் ஒற்றி யெடுத்த காயத்ரி பொங்கி வரும் துயரத்தைக் கட்டுப்படுத்திக் கொள்ள வழி தெரியாமல் தடுமாறியபடி எழுந்திருக்கிறாள். அந்தத் துயரத்தை வெளிப்படுத்த ஒரு தனி இடத்தைத் தேடிப் போகிறாள்.

அப்போது அவருக்கு வயது இருபத்தைந்து. ஆண்மையும், கம்பீரமும், அறிவாற்றலும் மிக்க ஓர் இளைஞனாக அவர் திகழ்ந்த நேரம். எல்லைக்கு அப்பால் மனத்தை நீள விட்டு எந்தத் தளையிலும் சிக்காமல் அவர் அவராகவே இருந்த நேரம்.

ஒரு நிறுவனத்தில் பொறுப்பான வேலையில் சேர்ந்திருந்தார். மணமங்கலம் சிறக்க அவருக்கு ஒரு பொறுப்பான மனைவியும் வந்து சேர்ந்திருந்தாள்.

இரவு மணி இரண்டு.

கட்டில் விளிம்பில் தலையைச் சாய்த்தபடி தரையில் அமர்ந்திருந்த காயத்ரி எழுந்தாள். அவருக்கு மருந்து கொடுக்க வேண்டும்.

அவளுக்கும்தான் தூக்கம் ஏது?

பெற்ற ஐந்து செல்வங்களில் இந்த இரண்டாவது பெண் காயத்ரிமீதுதானே தாம் அதிகப்படி அன்பைப் பொழிந்தோம்? அன்று தாம் அதிகப்படியாகக் காட்டிய அன்பும், பாசமும்தான் இன்று தனக்கே திரும்புகிறது போலும்!

முதல் பெண்ணுக்கு மணம் முடித்து அந்தக் கல்யாணத் திருக்காட்சி கண்களை விட்டு அகலுமுன், 'எனக்கு எப்போப்பா கல்யாணம்?...' என்று கேட்கிற மாதிரி வளர்ந்து நின்றாள் காயத்ரி.

அது வளர்ந்தவள் தவறா? பெற்றவர்கள் தவறா?

எல்லாரும் அயர்ந்து உறங்கிக் கொண்டிருக்கிறார்கள். காயத்ரியும்கூடத்தான். அவளுக்கு மட்டும் களைப்பில்லையா? இல்லையில்லை. அது ஆழ்ந்த உறக்கமாக இருக்காது. தன் உடல் உழைப்புக்கு, கண் விழிப்புக்கு மாற்றாகச் சிறிது சிரம பரிகாரம். அவ்வளவுதான்.

திடுமென்று உடலில் ஏதோ ஒரு நரம்பைச் சுண்டி இழுக்கிறது. நெஞ்சில் கலியுகத்தின் அந்திம காலப் பாதிப்பாய் வலி. 'அம்மா...!' என்று வாய் விட்டுப் புலம்பவும் இயலாமல் ஒரு ஜீவமரணப் போராட்டம்.

காயத்ரி விழித்துக் கொள்கிறாள்.

''என்னப்பா செய்யறது?....''

'என்னோட வலி உனக்கு எப்படியம்மா தெரிஞ்சது?....'

''அப்பா! கண் கலங்காதீங்க. இன்னும் ஒரு வாரத்திலே எல்லாம் சரியாப் போயிடும்னு டாக்டர் சொல்லியிருக்கார்...''

அவருக்காகப் பொய் சொல்கிறாள்.

'காயத்ரி! ஒரு தரம் இப்படித்தான் காய்ச்சலிலே படுத்திண்டிருந்தேன். அந்த ஒரு வாரமும் உன் அம்மா தூங்கவேயில்லே.' இப்படிக் கண் விழிச்சா உன் உடம்புக்கு ஆகுமா?'ன்னு கேட்டேன். 'நீங்க எழுந்து உட்கார்ந்தாத்தான் இந்தச் சரீரம் தலையைச் சாய்க்கும். உடம்புல பலம் இருக்கோ இல்லையோ, மாங்கல்ய பலம் எனக்கு நிறைய இருக்கு. அது போதும்னு சொன்னா. உன்

ளைப் பார்க்கறப்போ உன் அம்மாவோட ஞாபகம்தான் வரது. பெத்த தகப்பன் பிள்ளைகளுக்குத் தன் சொத்தை உயில் எழுதி வச்சிட்டுப் போவான். உன் அம்மா போகும் போது தன்னோட பொறுப்புக்களையெல்லாம் உனக்கு எழுதி வச்சிட்டுப் போயிட்டாப் போலிருக்கு.....!''

இவ்வளவையும் பார்வையாலேயே அவர் சொல்லச் சொல்லக் காயத்ரிக்குத் துக்கம் குமுறிக்கொண்டு வருகிறது.

**கா**யத்ரிக்குத் திருமணம்.

நல்ல இடத்துச் சம்பந்தம். பணத்தைக் கொட்டிக் கொட்டிச் செய்தார். இஷ்ட மித்ர பந்துக்கள் கல்யாண மண்டபம் பூராவும் நிறைந்திருந்தார்கள். நாதஸ்வரம், கச்சேரி, நாவிற்கும், மனத்துக்கும் நிறைவான விருந்து. காயத்ரியின் மீது பன்னீர்த் துளிகளாகப் பட்டுத் தெறித்த இதயபூர்வமான நல் வாழ்த்துக்கள்.

''பிறந்த பிறப்பிலேயிருந்து உங்ககூட இருந்துட்டு இப்போ ரொம்ப ரொம்பத் தொலைவுக்குப் போகப்போறதை நினைச்சா.''

அம்மாவின் தோளில் தொற்றிக்கொண்டு அப்பாவின் கைகளைப் பற்றிக் கொண்டு, அந்தச் செல்லக் குழந்தை சின்னக் குழந்தையாய்க் குமுறி குமுறி அழுதது.

நாற்பது வயதில் நாய்க் குணம் என்பார்கள். அது அவருக்கு ஐம்பதாவது வயதில் வந்தது!

காயத்ரியின் திருமணத்தையொட்டி அவர் வெளியில் கொஞ்சம் தொகை கடனைப் பெற்றிருந்தார். திருமணத்துக்குப் பின் பல்வேறு குடும்பச் சூழ்நிலைகளின் பலமுனைத் தாக்குதல்கள். வாக்களித்தபடி கொடுக்க இயலாமல் நெருக்கடி.

அப்படிப் பணம் கடனைக் கொடுத்தவர்களில் ஒருவர் தாமோதரன்.

**வா**சலில் ஆட்டோ வந்து நிற்கிறது.

கணேசனும், அவர் மனைவி சரளாவும் இறங்குகிறார்கள்.

''அப்பாவுக்கு எப்படி இருக்கு?'' என்று பதற்றத்துடன் கேட்டுக் கொண்டே உள்ளே நுழைகிறான்.

''அண்ணா... அப்பாவோட மனசுலதான் ஏதோ உளைச்சல், டாக்டர் கூடச் சொல்றார். எதுவோ அவரைப் பாதிச்சிருக்காம்...''

''அது என்னன்னு எப்படியம்மா தெரிஞ்சுக்கறது?''

''அதுதான் எனக்கும் புரியலே, அண்ணா''

**ஒ**ருமுறை பணத்துக்காகத் தாமோதரன் சற்று வலியுறுத்திப் பேசியபோது, இயலாமையின் தீர்க்கமான முத்திரையாய் வார்த்தைகள் கொழுந்துப்போய் வெளிவந்தன.

''ஆமாம், பணம் கொடுக்க முடியாது தான். கோர்ட்ல போய்ப் பார்த்துக்க...''

''சுந்தரம்! நான் கோர்ட்ல போய்ப் பார்க்க வேண்டாம். மனச் சாட்சின்னு ஒண்ணு இருக்கு. அது உரிய நேரத்தில் உனக்கு உன்னைப் புரிய வைக்கும்...''

இவ்வளவுதான் சொன்னார் தாமோதரன்.

தான் இரண்டாவது முறை மரணத்துக்குள்ளாகப் போவதாக நினைக்கிறார் அவர்.

தாமோதரனை வஞ்சித்தபோதே அந்தப் பழைய சுந்தரம், மனசுத்தமாக இருந்த சுந்தரம் இறந்து போயாயிற்று. இது போலி தான்.

இந்தப் போலியும் முடிவு கண்டு வெந்து சாம்பராவதற்குள் ஒரு முறை, ஒரே ஒரு முறை அந்தத் தாமோதரனைப் பார்த்துவிட வேண்டும். 'என்னை மன்னித்துவிடு' என்று கேட்க வேண்டும்.

''அம்மா!.....'' என்று முனகுகிறார்.

வியப்பின் நிழலில் சற்று நேரம் நின்றவள், அவரது முகத்தருகே குனிகிறாள். ''என்னப்பா?....''



# நெஞ்சிலே துணிவிருந்தால்

காதலர் இருவர் தொடும்போதோ, பார்வை படும்போதோ பின்னணியில் 'தனன தனன' என்று கோரஸ் ஒலிக்கும் '324வது' தமிழ்ப் படமான இதில்:

அற்புதமான தெங்குமரஹாட்டா வெளிப்புறப் படப் பிடிப்பும், அழகான சேலைகளில் அதைவிட அழகான ஸ்வப்னாவும், இனி வரப்போகும் பதினைந்து படங்களிலாவது கோபக்கார இளைஞனாகக் கண்ணை உருட்டப்போகும் விஜய்காந்தும், பாக்யராஜின் உருப்படியான ஒரே கண்டுபிடிப்பான சங்கிலி முருகனும், ''வாங்கடா, வாங்கடா'' என்ற கருத்து மிக்க பாட்டும் மோனோ கலரில் சின்னப் பெண் காட்டுக்குள் கூவியபடியே ஓடுவதை ''பூமிகா''விலிருந்து சாமர்த்தியமாய்த் தழுவிய டைரக்டர் எஸ். ஏ. சந்திரசேகரனும் ஒருபுறமிருக்க

சடுகுடு, குளியல் என்ற போர்வைகளில் நடக்கும் விரசக் காட்சிகளும், ரொம்ப வீக்கான பழிவாங்கும் கதையும், தொடர்பற்ற காட்சியமைப்புகளும், அலுப்பூட்டும் இசை அமைப்பும் (வேறு யார், நம்ம சங்கர் கணேஷ்தான்) சலிப்பூட்டும் ஸ்லோமோஷன் காட்சிகளும், திடீரென உடை கனவு சீனும், காமெடி என்ற பெயரில் நடக்கும் கூத்துகளும், சண்டைக் காட்சிகளில் விழுவதற்காகவே அடுக்கி வைக்கப்பட்ட டின்களும், ஆ...ஊ... என்றால் அரிவாளைத் தூக்கிக் கொண்டு அலையும் கதாபாத்திரங்களும், புரியாத முடிவுக்குக் கட்டியம் கூறும் வளவளா டைட்டில் கார்டும் மறுபுறமிருக்க,

நெஞ்சிலே துணிவிருந்தால்
மட்டும் போதாது.
பொறுமையும்
சகிப்புணர்ச்சியும் அவசியம் தேவை
படம் பார்க்கும் நமக்கு.

—சிந்து — ஜீவா



''தாமோதரனே....''

அவ்வளவுதான்.

உதடுகள் மட்டும் துடித்துக் கொண்டிருக்கின்றன. வார்த்தைகள் வெளிவரவில்லை.

போன மாதம்.

கணேசன் அந்தத் தாமோதரனை பெங்களூரில் பார்த்தான்.

''அப்பா சௌக்கியமா இருக்காரா? தம்பி தங்கைகளெல்லாம் நல்லா இருக்காங்களா?'' என்று மனப்பூர்வமாக விசாரித்தார். தாம் வடக்கே யாத்திரைக்குக் கிளம்பிக் கொண்டிருப்பதாகச் சொன்னார். 'திரும்பி வருகையில் கட்டாயம் அப்பாவைப் பார்க்க வருகிறேன்' என்றார்.

விரோதம் பாராட்டாத மனம் பாலாய்ச் சொற்களைக் கறந்தது.

''எதுக்கும் நீ பெங்களூருக்கு டிரங்கால் போட்டுப் பாரேன். அப்பாவுக்கு ஏனோ அவரைப் பார்க்கணும் போலிருக்கு...''

''கட்டாயம் முயற்சி செஞ்சு பார்க்கிறேன் காயத்ரி. போன்ல கிடைச்சார்னு உடனே புறப்பட்டு வரச் சொல்றேன்...''

அரை மணிக்கெல்லாம் திரும்பி வருகிறான் கணேசன்.

''உடனே புறப்படறேன்னு சொன்னார். நேற்றுத்தான் திரும்பி வந்தாராம்...''

காயத்ரியின் மனசு நிறைகிறது.

இப்போது எல்லாரும் வந்திருக்கிறார்கள். அவரது முக முழிக்காக வந்திருக்கிறார்கள். பழையதை மறந்து அவர் மேல் அனுதாபம் கொண்டு வந்திருக்கிறார்கள்.

சிந்தனை அவரை ஒரு பழவங்காட்டு நீலியாய்ப் பற்றிக் கொண்டு அவரை ஆட்டுவித்துக் கொண்டிருக்கிறது.

இடைப்பட்ட பத்து வருட காலத்தில் தான் வெகுவாக மாறிப் போய்விட்டதை நினைத்து வெட்கமும், வேதனையும் சிற்றுருளாக இறங்கிக் கலந்து மீண்டும் கிளைபிரிந்து அவரைச் சித்திரவதை செய்துகொண்டிருக்கின்றன.

தான் சாகப் போகிறோம் என்ற வருத்தம் துளிக்கூட இல்லை. பயம் துளிக்கூட இல்லை.

''அப்பா! உங்கசிநேகிதர் வந்திருக்கார்!''

காயத்ரி காதருகே கிசுகிசுக்கிறாள்.

மலர்ந்த கண்களில் நியான் விளக்கின் நீலம் பனிச்சிடுகிறது.

தாமோதரன் உள்ளே வருகிறார்.

''சுந்தரம்!....''

கட்டிலில் அவர் பக்கத்தில் உட்கார்ந்தவர் கையிலிருந்த பையைக் கீழே வைத்துவிட்டு அவருடைய கைகளைப் பற்றிக்கொள்கிறார். பத்து வருட வருத்தமாய்ச் சொற்கள் பாகாய்த் தளர்ந்து வருகின்றன.

அவருக்குப் பேச முடியவில்லை.

'உன்னைப் பார்க்கணும்னு நினைச்சேன். வந்திட்டே...'

திருப்தியின் நிழல் மட்டும் நீண்டுவிரிகிறது.

தாமோதரன் பையிலிருந்து ஒரு சிறு செம்பை எடுக்கிறார். ''இந்தாம்மா, கங்கை ஜலம். இவருக்குக் கொடு...''

# புத்துணர்ச்சிதரும் தூய சுவாசம் ... உறுதிமிக்க, ஆரோக்கியமான பற்கள்

## அளித்திடுதே கோல்கேட் டெண்டல் க்ரீம்

ஒவ்வொரு சாப்பாட்டிற்குப் பிறகும் கோல்கேட் கொண்டு உங்கள் பற்களைப் பிரஷ் செய்யுங்கள். உலகெங்கும் பல் டாக்டர்கள் சிபாரிசு செய்வதைப் போலவே அது உங்களைப் பாதுகாக்கிறது.

உங்கள் பற்களுக்கிடையே தங்கியுள்ள உணவுத் துணுக்குகளில் பாக்டீரியாக்கள் வளர்கின்றன. இவை வாய் துர்நாற்றத்தையும், பிறகு வலிமிக்க பற்சிதைவையும் உண்டாக்கும்.

எனவே சாப்பிட்டு முடித்தவுடனேயே கோல்கேட் முறையில் பற்களைப் பிரஷ் செய்யுங்கள். அது புத்துணர்ச்சியுடன் இனிய சுவாசத்தைத் தருவதற்கும், பற்களுக்கு வெண்மையளிப்பதற்கும், பற்சிதைவை எதிர்ப்பதற்கும் மிகவும் சக்தி வாய்ந்தது என்று நிரூபணமாகியுள்ளது.

**கோல்கேட்டின் புத்துணர்ச்சி தரும், பெப்பர்மின்ட் சுவை பல்துலக்குவதை ஒரு இன்ப அனுபவமாக்குகிறது.**

**சுலபமான, கோல்கேட்டின் செயல் புரியும் முறை**



உணவுத் துணுக்குகள் பற்களுக்கிடையே சிக்கிக் கொள்வதால் துர்நாற்றத்தையும், பற்சிதைவையும் உண்டாக்கும் பாக்டீரியாக்கள் வளருகின்றன.



கோல்கேட்டின் ஒப்பற்ற, செயல்புரியும் நுரை ஆழ ஊடுருவிச் சென்று உபாதை தரும் உணவுத் துணுக்குகளையும் பாக்டீரியாக்களையும் அகற்றி விடுகிறது.



பயன்: கவர்ச்சிமிக்க வெண்மையான பற்கள், தன்னம்பிக்கை தரும் இனிய சுவாசம், பற்சிதைவுக்கெதிராகப் பாதுகாப்பு.

**கோல்கேட் டெண்டல் க்ரீம் உபயோகித்து வாய்துர்நாற்றத்தைத் தடுத்திடுங்கள் பற்சிதைவை எதிர்த்திடுங்கள்**




DC-G-74 TM

# கேசத்துக்கு மென்மையும் பட்டுத்தன்மையும் தரும் இயற்கையான பராமரிப்பு

ஸ்வஸ்திக் சீக்காய்
சோப்பில் சுத்தமான
சீக்காயின் இயற்கையின்
எல்லா நற்குணங்களும்
நிரம்பியுள்ளன.
உபயோகிப்பது மிகவும்
சௌகரியமானது. திரவ
ஷாம்பூவைவிட மிகவும்
சிக்கனமானது.

வளமான நறுமணமிக்க
நுரை உங்கள் கேசத்திற்கு
மணமூட்டுகிறது. மென்மைய
முடன் கேசம் முழுவதையும்
சுத்தமாக்குகிறது. உங்கள்
கேசம் ஆரோக்கியமுடன்
பளபளக்கிறது. புதுமையான
மணம் வீசுகிறது.




# ஸ்வஸ்திக் சீக்காய் சோப்

சீக்காய் அடங்கியது—இந்தியப் பெண்மணிகளின்
எழிலோங்கும் கேசத்தின் பரம்பரை ரகசியம்!

shilpi dm 25/79 tam.

காயத்ரி அதைப் பெற்றுக் கொண்டு சிறிதளவு சுந்தரத்தின்வாயில் ஊற்றுகிறாள்.

"சுந்தரம்!... ஒண்ணும் கவலைப் படாதே. இன்னும் ரெண்டு மூணு நாளிலே எழுந்து உட்கார்ந்திடுவே பாரு...."

அது வேடிக்கை இல்லை.

இதோ!

கட்டிலில் உட்கார்ந்தபடி காயத்ரி கரைத்து எடுத்து வந்த ஆகாரத்தை விழுங்கிக்கொண்டிருக்கிறார் சுந்தரம்.

அவரை எழுந்திருக்க வைத்தது எது? யார்? தாமோதரனா? அவர் கொண்டு தந்த கங்கை ஜலமா? பின் வேறு எது?

**ப**தினைந்து நாட்களுக்குப் பிறகு—

கணேசன் ஊருக்குப் புறப்படுகிறான்.

"அப்பா! உடம்பை ஜாக்கிரதையாப் பார்த்துக்குங்க..."

"வேளா வேளைக்கு அவருக்கு வேண்டியதைக் கொடுங்க. அப்பாவே கேட்கட்டும்னு இருக்காதீங்க...."

வேண்டுகோளும், உத்தரவுமாக மாறிமாறி வருகின்றன.

"தாமோதரனைப் பார்த்தியானா சொல்லுடா. அவகாசம் கிடைச்சா இந்தப் பக்கம் வந்துட்டுப் போகச் சொல்லு..."

"சரிப்பா...."

டாக்டர் கைவிட்ட பின், சுற்றம், நட்பு எல்லாம் உதட்டைப் பிதுக்கிய பின், எல்லாருமே அவருக்குக் கெடு எத்தனை நாட்கள் தள்ளிப் போகிறது என்று பார்த்துக்கொண்டிருக்கையில் குஷியாக எழுந்து உட்கார்ந்திருந்த சுந்தரம், தாமோதரனுடன் தாம் பழகிய நாட்களைப் பற்றிய இனிய கனவுகளில் மூழ்கிப் போகிறார்.

மூன்றும் நாள் கணேசனிடமிருந்து கடிதம் வருகிறது.

சுந்தரத்தைப் பார்த்துவிட்டு ஊருக்குத் திரும்பிய தாமோதரன் மறுநாளே மாரடைப்பால் காலமாகி விட்டாராம்!

'தாமோதரன்! நீ என்னைப் பார்க்க மட்டும் வரலே. வெறும் கங்கை ஜலத்தைக் கொடுத்திட்டுப் போகமட்டும் வரலே. அந்தக் கங்கை ஜலத்திலே உன் உயிரையே கலந்து கொடுத்திருக்கே. இப்போ என் உடம்புல தங்கியிருக்கிறது உன் உயிர்....'

மலர்ச்சியும், உற்சாகமும் மண்டிக்கிடந்த அவரது மனத்தை வெறுமையின் இருள் கொஞ்சம் கொஞ்சமாகத் தன் விஷ நாக்கால் தீண்டத் தொடங்குகிறது....

# வேலையில்லாப் பட்டதாரிகளுக்கு...

ஒவ்வொரு வாரமும் உங்களில் ஒருவருக்கு உதவக் காத்திருக்கிறோம்.

மூன்று விதங்களில்—

(1) உங்கள் தகுதிகள், திறமைகள், வயது, ஆரோக்கியம், விலாசம், எதிர்பார்ப்பு, லட்சியம் முதலிய விவரங்களை மிகச் சுருக்கமாக எழுதிப் புகைப்படத்துடன் அனுப்பினால் பிரசுரிக்கிறோம்.

(2) இத்துடன் தாங்கள் தேர்ச்சி பெற்றுள்ள துறை பற்றி ஒரு சிறு கட்டுரை எல்லோருக்கும் படிக்க சுவாரஸ்யமாக அமையும்படி எழுதி அனுப்பினால் பிரசுரிக்கிறோம்.

இந்த இரண்டையும் படித்துப் பார்க்கும் கல்கி வாசகர்களில் யாரேனும் உங்களைப் பயன்படுத்திக் கொள்ளவோ கூட்டுச் சேர்ந்து தொழில் – வியாபாரம் தொடங்கவோ விரும்பினால் உங்களுடன் தொடர்பு கொள்ள முன்வரலாம் அல்லவா?

(3) பிரசுரமாகும் மேற்படி கட்டுரைக்கு ரூ. 100 சன்மானம் வழங்குகிறோம். ஏதோ சில நாட்களை ஓட்டவாவது இத்தொகை உங்களுக்கு உதவுமல்லவா?

பிரசுரத்துக்கு ஏற்கப்படாத கட்டுரைகள், புகைப்படங்கள் முதலானவற்றைத் திரும்பி அனுப்ப இயலாது. கடிதப் போக்குவரத்து கிடையாது. ஆறு மாதங்களுக்கே இத்திட்டம் அமலாகும். பயன் அறிந்து பின்னர் நீடிக்கப்படலாம். உறையின்மேல் "நான் பயின்ற துறை" என்று குறிப்பிடவும்.



# மாடி வீட்டு ஏழை

**உ**டன் பிறப்புக்களே!

மனத்தைத் திடப்படுத்திக் கொள்ளுங்கள்.

ஆரம்பத்தில் கலைஞர் தோன்றி பத்தாவான முன்னுரை கதை பற்றித் தர நம் எதிர்பார்ப்பு ஏகமாகிறது. மாடியில் வசிக்கும் பணக்கார மேல் வர்க்கத்திடமுள்ள கஷ்டங்களைச் சொல்லப் போவதாகச் சொல்கிறார். கடைசியில் நமக்குக் கிடைப்பது பலத்த ஏமாற்றம். கணவன் பணம் பணம் என்று மனைவியைக் கவனிக்காமல் பணம் சேர்க்க ஆரம்பிப்பதால் பணக்கார மனைவிக்கு நிம்மதியில்லை. மாடி வீட்டில் இருந்தும் அவள் ஏழை. கதை இதுதான்.

என்ன கண்மணிகளே! முணு முணுப்புக் கேட்கிறது. கலைஞரிடமிருந்து இப்படி ஒரு திரைக் கதையா? எத்தனை பிரச்னைகள் உள்ளன? சரி வசனத்திலாவது புகுந்து விளையாடுறாரா என்று தம்பிகள் முன் சீட்டில் அமர்ந்து காதைத் தீட்ட — அங்கும் ஏமாற்றம். விசாரணைக் கமிஷன் என்ற ஒரு வார்த்தைக்கே கை தட்டும் உங்கள் ஏக்கம் கலைஞருக்குப் புரியவில்லை. புரிந்துகொள்ளக் கஷ்டமான அடுக்கு மொழி செந்தமிழ் ஏட்டுக்குத் தேவலாம். இந்தக் கால சினிமா வெகுவாய் மாறிவிட்டது.

இந்த உயரிய கதையைச் சின்னதாகச் சொல்வதை விடுத்து. இரண்டு கதை இரண்டு சிவாஜி. அப்பா மகன் மகனை விட அப்பா இளமையாக நடிக்கிறார். மகனுக்கு ஸ்ரீப்ரியாவுடன் ஆடிப் பாடி, ஏறத்தாழ முத்தமிட்டு, படம் பூரா காதல் பண்ணவே நேரமில்லை. நல்ல வேளை இன்னொரு சிவாஜியாவது அப்பாவாக வந்தாரே என்று நினைத்தால் அதிலும் மண். அவரும் பிளாஷ் பேக்கில் இளைஞனாகி சுஜாதாவோடு கடைசிவரை ஆடிப் பாடுகிறார். (இன்னொரு பிளாஷ் பேக் போட்டு பேர சிவாஜி சுஹாசினியோடு டூயட் ஆடுவதாகக் காட்டியிருந்தால் இன்னும் புதுமையாக இருந்திருக்கும்) அநாவசியத்துக்கு நீளும் பிளாஷ்பேக். பாதியை எடிட்டர் வெட்டியிருக்கலாம். இரண்டு சிவாஜியும் மனைவியைக் கவனிக்காமல் பணமே பிரதானம். கடைசியில் அப்பா—கதை கேட்டு மகன் திருந்தல்.

ஒவ்வொரு ஃப்ரேமிலும் அரை மணி பேசிக் கொண்டிருக்கிறார்கள். (உதாரணம்: அப்பா சிவாஜியும் ஸ்ரீப்ரியாவும், கடைசியில் அப்பாவும் மகனும் போன்றவை.) பஜுவாய் அழுத்தும் எம். எஸ். வி.யின் பாடல்கள். ஒரு பாடல் மட்டுமே கிளுகிளுப்பு.

| | |
|---|---|
| கொடுப்பது | ரூ. 1—00 |
| கிடைப்பது | ரூ. 0—40 |
| (கலைஞர் 0-15 | |
| சுஜாதா 0-15 | |
| சிவாஜி 0-05 | |
| கேமரா 0-05 | |
| தண்டம் | ரூ. 0—60 |

பயங்கர மழையில் கோட்டு சிறிதும் நனையாமல் நுழையும் சிவாஜி. டபுள் ஆக்டிங் காட்சிகளில் சாதனை பண்ணுத காமிரா. (காஷ்மீர் காட்சிகளில் சிவாஜி ஸ்ரீப்ரியாவை மறைத்துப் பார்த்தால் பின்னணி குளுமை) பெற்ற பெண்ணைப் பொது இடத்தில் திட்டும் பொருந்தா தந்தை. இளம் மனைவியை அம்போன்னு விட்டுப் பணம் தேடப் போகும் பொருந்தாக் கணவன்.

கலைஞர் பேரில் கண்மணிகளும், திலகத்தின் பேரில் ரசிகமணிகளும் நம்பிக்கை இழக்கும்படியான ஒரு படம். இரு சகாப்தங்களின் சரிவு.

—நளினி சாஸ்திரி





## பாடல் பெற்ற குழந்தை!

எனக்கு ஒரு மகன் பிறந்தான். சென்னையில், 1971ல். தலைப்பிள்ளை ஆண் குழந்தை. மகிழ்ச்சிக்கு எல்லையுண்டோ?

என் தந்தையின் வீட்டில் என் குழந்தைக்குத் தொட்டில் விழாவில் அனைவரும் பரவசம் அடையத்தக்க ஒரு கோலாகலமான நிகழ்ச்சி நடந்தது. எங்கள் குடும்ப நண்பரான திரு. அவ்வை டி.கே. சண்முகம் என் குழந்தையின் பெயர் சூட்டு விழாவிற்கு வந்து அற்புதமாகத் தாலாட்டுப்பாடி எங்களையெல்லாம் மெய்சிலிர்க்கவைத்தார்.

அன்பைக் கவரும் தம்பதிகள்
அல்லி சோம சுந்தரத்தின்
இன்பக் கனியே கல்யாணு!
எழிலே தாலே தாலேலோ!''

என்று டி.கே.எஸ்., அவருக்கே உரிய பாணியில் பாசத்தோடு பாடி வாழ்த்தும் பெருமையைப் பெற்றது என் குழந்தை. ஆம்; என்குழந்தையின் பெயர் கல்யாணன்.

'கொழு கொழு' வென்று மிக அழகான என் மகனைத் தூக்கிக் கொஞ்சுவதற்கு எல்லோரும் போட்டி போடுவார்கள். ஆண்கள் தூக்கினால் அழுவான்; பெண்கள் தூக்கினால் துள்ளிக் குதிப்பான்!

- அல்லி சோமசுந்தரம்

# "சிரிப்புக்கு ஓர் அமைப்பு"



மயிலாப்பூர் பாரதீய வித்யா பவனில் ஒரு ஞாயிற்றுக்கிழமை காலை சிரிப்பாய் சிரித்துக் கொண்டிருந்தது ஒரு கூட்டம். நிகழ்ச்சி - ஹ்யூமர் கிளப் இன்டர்நேஷனலைச் சேர்ந்தவர்களின் சந்திப்பு. இதன் பி.ஆர்.ஓ. கலாகேந்திரா கோவிந்தராஜ். சந்தோஷத்தில் அடுத்தவர் தொடையில் ஓங்கி அடித்தபடியே சிரித்துக் கொண்டிருந்தார்கள் அங்கத்தினர்கள். பெங்களூரைச் சேர்ந்த பேராசிரியர் துரைசாமி (படம்) நல்ல ஜோக்குகள் பலவற்றை வீசினார்.

- மகா கஞ்சனான ஒரு எஜமானன் தற்கொலை பண்ணிக்கொள்ள முடிவு செய்தான். மிகுந்த விசுவாசமுள்ள அந்த வேலைக்காரன் கயிற்றைக் கத்தியால் அறுத்து எஜமானனைக் காப்பாற்றிவிட்டான். அடுத்த மாதம் வேலைக்காரனுக்குச் சம்பளம் கொடுக்கும்போது, சேதமான கயிற்றின் கிரயத்தைக் கழித்துக் கொண்டான் யஜமானன்!

- உலகம் உருண்டையாக இருக்கும் என்பதை மாணவர்களுக்கு விளக்குவதற்காகத் தம் பாக்கெட்டில் இருந்த உருண்டையான பொடி டப்பாவைக் காட்டினார் ஆசிரியர்.

  ஒரு சனிக் கிழமை இன்ஸ்பெக்டர் வந்தார். ஒரு மாணவனைக் கேட்டார்: ''உலகம் எப்படி இருக்கும்?'' பையன் திருதிருவென்று விழித்தான். ஆசிரியர், மேலதிகாரிக்குப் பின்னால் நின்றுகொண்டு பொடி டப்பாவைப் பையனுக்குக் காட்டி நினைவூட்டினார். அன்றைக்கு அவரிடமிருந்தது சதுரமான பொடி டப்பா. பையன் மகிழ்ச்சியாகச் சொன்னான்: ''சார்... உலகம் எல்லா நாட்களிலும் உருண்டையாக இருக்கும்! ஆனால் சனிக்கிழமையில் மட்டும் சதுரமாக இருக்கும்!''

- ஒரே ஒரு புத்தகத்திலிருந்து திருடினால் அது காப்பிரைட்டை மீறுவதாகும். ஆனால் பல புத்தகங்களிலிருந்து திருடினால் அதற்குப் பெயர் ஆராய்ச்சி!

- ''டாக்டர், படுக்கையை விட்டுக் காத்தால எழுந்ததும் பத்து நிமிஷம் தலையை வலிக்குது. என்ன செய்யட்டும்?''

  ''இனிமே தினமும் பத்து நிமிஷம் லேட்டா எழுந்திருங்க, சரியாயிடும்.''

தொகுப்பு: பாபு; புகைப்படம்: எஸ்.வி. சேகர்

## காமெடி ட்ராக்

கருத்து: 'கமல்'
படம்: ஜெயந்தி

ஏம்பா,...
துணி வ...
பண்றா...
'டி.சி.எம்'
என்...

அப்பப்பா... துணிகள் இப்படி சீக்கிரமா அழுக்காயிடறதைப் பார்த்தாலே வெறுப்பாயிருக்குதுங்க!

உனக்கு அப்படியிருக்கு. லாண்டிரிக்காரர்களைக் கேளு. அவங்க 'அழுக்கே உன்னை ஆராதிக்கிறேன்' என்று சொல்வாங்க!

.எம்னு
ம்பரம்
ளே,
ன்றுக்
'தில்லி கிளாத் மில்ஸ்'னு அர்த்தம் அது 'தில்லி மில்லு'




எங்க அத்தை பேச ஆரம்பிச்சா ஓயாமல் பேசிக்கிட்டே இருப்பாங்க!
எல்லா அத்தைகளும் ஒரே டைப்தான். அதனால்தான் நான் சொல்கிறேன்... 'அத்தைகள் ஓய்வதில்லை'








என்ன,
தத்திலே கஞ்சி
ப்படியே இருக்கு?
அவசரத்திலே சரியாக வடிக்கலே!
அதுக்காகத்தான் நான் ஆயிரம் தரம் சொல்லி ருக்கிறேன், 'வடியும் வரை காத்திரு' என்று.




என்ன! இந்த நாய் பாலைத் தொடமாட்டேன் என்கிறதே!
அடி அசடே.. அது வால் பக்கம். 'வாய் இந்தப் பக்கம்'

பல் டாக்டர்கள் கூறுகிறார்கள்

பற்கள், ஈறுகளின் முறையான பராமரிப்பிற்கு, பற்களை பிரஷ் செய்வது போன்றே ஈறுகளைத் தேய்த்துக் கொடுப்பதும் அவசியமாகும்

# போர்ஹென்ஸ் டபிள் ஆக்ஷன் டூத்பிரஷ் உபயோகியுங்கள்

**இது உங்கள் பற்களை பிரஷ் செய்யும்போதே ஈறுகளையும் தேய்த்துக் கொடுப்பதற்கேற்ப விசேட முறையில் உருவாக்கப்பட்டது**

மென்மையான
வெண்ணிறக்
குச்சங்கள் உங்கள்
ஈறுகளைத் தேய்த்துக்
கொடுக்கின்றன

உறுதியான
நீலநிறக்
குச்சங்கள்
உங்கள் பற்களைத்
துலக்குகின்றன

## போர்ஹென்ஸ் டூத்பிரஷ்

குடும்பத்தினர் எல்லோருக்கும்
அடல்ட் (மீடியம், சாஃப்ட்),
ஜூனியர், பேபி

ஜானகி மாமிக்குத் திடீரென்று தனிக் குடித்தனம் போக வேண்டும் என்ற ஆசை முளைத்து விட்டது. இப்பொழுதுதான் தேனிலவு முடிந்து வந்திருக்கும் பிள்ளைக்கும், மருமகளுக்கும் இப்படிப்பட்ட ஆசை ஏற்பட்டிருந்தால் ஆச்சரியப்படுவதற்கு ஒன்றுமில்லை. ஆனால் தனிக் குடித்தன ஆசை ஏற்பட்டது என்னவோ அறுபதாம் கல்யாணத்தைத் தாண்டிய ஜானகி மாமிக்குத்தான்.

காரணம் வேறு ஒன்றுமில்லை. வேலைக்குப் போகும் மருமகளான சாந்தா தினமும் காலை ஒன்பது மணிக்கெல்லாம் தினுசு தினுசாகப் புடவையும், அதற்குப் பொருத்தமாக ரவிக்கையும் அணிந்து, தோளில் டம்பப் பையை மாட்டிக் கொண்டு ஆபீசுக்குப் புறப்பட்டுப் போகும்பொழுது தான் மட்டும் புடவையை எடுத்துச் செருகிக்கொண்டு, வியர்க்க விறுவிறுக்கச் சமையல் அறையே கதி என்று இருக்க வேண்டிய நிலையை எண்ணி அழுகை அழுகையாக வந்தது ஜானகி மாமிக்கு. மாலையிலும் ஆபீசில் வேலை அதிகம், களைப்பாக இருக்கிறது என்று சொல்லிச் சமையல் அறைப் பக்கமே தலை வைத்துக் கூடப் படுக்காமல் மருமகள் தப்பித்துக் கொள்வதைக் கண்டு ஆத்திரமடைந்த ஜானகி மாமி, கணவர் அப்புசாமியிடம் தனிக் குடித்தனம் போக வேண்டும் என்று தலையணை மந்திரம் ஓத ஆரம்பித்தாள்.

அவரோ ''நீதானே வேலை பார்க்கும் பெண் வேண்டும் என்று ஊரெல்லாம் சல்லடை போட்டுத் தேடிப் பெண் எடுத்தாய். இப்பொழுது முணகினால் முடியுமா? உனக்கு கூழுக்கும் ஆசை மீசைக்கும் ஆசை'' என்று ஒரே போடாகப் போட்டு விட்டார். ஜானகி மாமிக்கு வாயைத் திறக்க முடியவில்லை. ஆதி நாளிலிருந்தே ஜானகி மாமியின் தனிக் குடித்தன ஆசைக்கு முட்டுக் கட்டை போட்டவர் ஆயிற்றே? ஜானகி மாமிக்குத் தன்னுடைய தலைவிதியை நொந்து கொள்வதைத் தவிர தற்போதைக்கு வேறு வழி ஒன்றும் புலப்படவில்லை.

ஆனால் அவளுடைய பொறுமை எல்லை மீறிவிட்டது. ஒரு வருஷத்துக்கெல்லாம் குழந்தையும் கையுமாகப் பிறந்தகத்திலிருந்து வந்திறங்கிய மருமகள் நான்கு நாட்கள் கழித்துப் பழையபடியே தினுசு தினுசாக

# ஜானகி மாமி தனிக் குடித்தனம் போகிறாள்!



ரமாமணி சுந்தர்

உடுத்திக் கொண்டு, மாமியாருக்கும், குழந்தைக்குமாகச் சேர்த்து ''டாடா'' காண்பித்துவிட்டு ஆபீசுக்குப்போக ஆரம்பித்ததும், தான் இத்தனை நாட்கள் சமையல்காரியாக இருந்தது போதாதென்று இனிமேல் ஆயாவாகவும் இருக்க வேண்டிய நிலைமை வந்து

விட்டதை எண்ணித் தூக்கம் தானவில்லை ஜானகி மாமிக்கு. அப்புசாமியிடம் மறுபடி யும் தலையணை மந்திரம் ஓத ஆரம்பித்தாள்.

அப்புசாமியும் அற்புதமான ஆலோசனை ஒன்றைக் கூறினார்.

''அடியே, தனிக் குடித்தனம் போனால் இத்தனை வயதுக்கு மேல் கிழங்களுக்கு என்ன தனிக் குடித்தன ஆசை என்று ஊரே நம்மைப் பார்த்துச் சிரிக்கும். அதனால் பூனாவில் இருக்கும் இரண்டாவது பிள்ளை ரகுவிடம் போயிருக்கலாம். நல்ல வேளை அவன் மனைவி வேலைக்கெல்லாம் ஒன்றும் போகவில்லை.''

தில்லிக் குளிரும், வெய்யிலும் தங்களுக்குச் சரிப்பட்டு வரவில்லை என்று ஏதோ சாக்குப் போக்கெல்லாம் சொல்லி ஒரு வழியாக பூனாவுக்கு மூட்டை முடிச்சு டன் போய்ச் சேர்ந்தார்கள் ஜானகி—அப்பு சாமி தம்பதி. பிள்ளை, மருமகள், பேரன் பேத்தி எல்லோரும் ஸ்டேஷனுக்கு வந்து வரவேற்று ஏகப்பட்ட மரியாதை யெல்லாம் செய்து வீட்டுக்கு அழைத்துக்கொண்டு போனார்கள். மருமகள் கமலா தடபுடலாகப் பாயசம், வடை என்று விருந்தே வைத்து இவர்களைத் திக்குமுக்காடச்செய்துவிட்டாள். ஜானகி மாமிக்கு ஆனந்தம் பிடிகொள்ள வில்லை. மாமியார், மாமனாரை இவ்வளவு தூரம் உபசரிக்கும் மருமகளும் உண்டோ என்று மூக்கில் விரல் வைத்தாள். பேரன் பேத்திகளுடன் கொஞ்சிக் குலாவுவதில் மெய் மறந்து போனாள் ஜானகி மாமி.

உண்ட களைப்பு நீங்கச் சிறிது நேரம் ஓய்வு எடுத்துக்கொண்ட பிறகு, குடும்பம் முழு வதும் ஹாலில் கூடியது. மெதுவாகப் பேச்சை ஆரம்பித்தான் ரகு.

''நாங்களே உங்களுக்குக் கடிதம் எழுத வேண்டும் என்று நினைத்துக்கொண் டிருந்தோம். நல்லவேளை நீங்களாகவே புறப் பட்டு வந்து விட்டீர்கள். விலைவாசி ஏறிக் கொண்டு போவதைப் பார்த்தால் என் சம்பளத்தில் குடித்தனம் நடத்த முடியும் என்று தோன்றவில்லை. அதனால் கமலாவும் அடுத்த மாதத்திலிருந்து வேலைக்குப் போகப் போகிறாள். நீங்கள்தான் வந்து விட்டீர்களே, குழந்தைகளைக் கவனித்துக் கொள்வதற்கு. கமலா கவலையே இல்லாது இனிமேல் வேலைக் குப் போகலாம்.''

ஜானகி மாமிக்குத் தலையைச் சுற்றியது. சிறிது நேரம் முன்னால் வாஞ்சையுடன் பார்த்த அதே பேரன், பேத்திகளை வானரப் படையைச் சேர்ந்தவர்களைப் பார்ப்பது போல் முறைத்தாள். அப்புசாமியோ மனைவி யைப் பார்க்கத் துணிவின்றித் தலையைக் குனிந்து கொண்டார். இன்று இரவு மனைவி தன்னை உலுக்கி எடுத்துவிடப் போகிறாளே என்று அவருக்கு வயிற்றில் புளி யைக் கரைத்தது.

இந்த வில்லங்கத்திலிருந்து தப்பித்துக் கொள்வதற்கான புதிய உத்தி ஒன்றை மனைவிக்குச் சொல்லிக் கொடுத்தார் அப்பு சாமி.

''அடியே, போக வர நாட்டுப் பெண்ணை ஏதாவது நொண நொணவென்று சொல் லிக்கொண்டே இரு. உன்னுடைய நச்சரிப்பு தாங்காது அவளே நம்மை இங்கிருந்து அனுப்பிவிடுவாள்.''

மருமகளைத் நொண நொணவென்று கழுத் தறுப்பது மாமியாருக்குச் சொல்லிக்கொடுக்க வேண்டுமா? ஜானகி மாமி மறுநாளே தன் னுடைய உத்தியைக் கையாள ஆரம்பித் தாள். நாட்டுப் பெண்ணை நின்றால் குற்றம், உட்கார்ந்தால் குற்றம் என்று சொல்லி வலுச் சண்டைக்கு இழுத்தாள்.

மாமியாருக்கு இவ்வளவு சாமர்த்தியம் இருந்தால், மருமகளுக்கு அதில் பாதியாவது இருக்காதா? மருமகளுக்கு என்னபைத்தியமா பிடித்திருக்கிறது, இவ்வளவு உபயோகமாக இருக்கும் மாமியாருடன் சண்டை போடு வதற்கு? பூமாதேவியையே தோற்கடித்தாற் போன்று பொறுமையின் அவதாரமாக இருந்தாள் கமலா. எப்பொழுதாவது கோபம் வந்தால்கூட, ஒன்றாந் தேதி யன்று கிடைக்கும் சம்பளம், அதன் மூலமாக வாங்கும் தினுசு தினுசான புடவை, நகைகள் இவற்றை நினைத்துக் கொண்டு, கோபத்தை அடக்கிக்கொண்டு விடுவாள்.

இப்படியாக ஒரு வருடம் ஓடியது. நாட்க ளாக ஆக ஜானகி மாமி கமலாவின் பொறு மையை மிகவும் சோதிக்க ஆரம்பித்து விட்டாள். ஏதோ குழந்தைகளைக் கவனித் துக்கொள்கிறாளே என்பதற்காகப் பேச்சுரி மையை இழந்து, கேவலம் மாமியாருடன் சண்டை கூடப் போட முடியாமல் வாழும் வாழ்க்கையும் ஒரு வாழ்க்கையா என்று கம லாவுக்கு வெறுப்பு ஏற்பட்டு விட்டது. மேலும் மாமியாரிடம் காண்பிக்க முடியா மல் சிரமப்பட்டு அடக்கி வைக்கும் கோபக் கனலை யெல்லாம் கமலா ஊருக்கு இளைத் தவன் பிள்ளையார் கோவில் ஆண்டி என்று இருக்கும் கணவன் ரகுவின் மீது கக்கினாள். அதனால் ரகுவுக்கும் எப்படியாவது இந்தப் பிரச்சினைக்கு முற்றுப்புள்ளி வைக்க வேண்டும் என்று தோன்றிவிட்டது.

அடுத்த முறை ஜானகி மாமி, ''எனக் கென்ன தலையெழுத்தா? இந்த வயதான காலத்தில் குழந்தை, குட்டிகளைக் கட்டி மேய்த்துக் கொண்டு வீட்டில் அடைந்து

கணவன்: 'ஆபீஸிலிருந்து வந்ததும் எனக்குத் திருஷ்டி சுற்ற ஆரம்பிச்சிட் டியே... என்ன விஷயம்?

கொண்டை போட்ட மனைவி: ''உங்க கை வண்ணத்தால் மலர்ந்த என் கொண் டையை ஆபீஸில் பாராட்டாதவங்களே இல்லே... அதற்காகத்தான்!''

- உ. ராஜாஜி



கிடக்க. ஏதோ நம் ஊரில் போய், கோயில் குளம் என்று இருந்தால் போகிறஇடத்துக்குப் புண்ணியம் தேடலாம்'' என்று அலுத்துக் கொண்ட உடன், ரகு ஓடியே போய் ஜானகி–அப்புசாமி தம்பதிக்கு ஊருக்குப் போக டிக்கெட் வாங்கிவிட்டான்.

ஜானகி மாமிக்குத் தாங்கள் போட்ட திட்டம் இவ்வளவு எளிதில் வெற்றியைத் தேடிக் கொடுத்ததில் ஒரே ஆனந்தம். இம்முறை நேராகத் தன்னுடைய சொந்த ஊராகிய மதுரைக்குத் தனிக் குடித்தனம் போவதாக முடிவெடுத்த தம்பதியர், சென்னையில் இருக்கும் தங்கள் மூத்த பிள்ளை சங்கருக்கு மதுரைக்குப் போவதற்கான ஏற்பாடெல்லாம் செய்யச் சொல்லி முன்கூட்டியே எழுதி விட்டார்கள்.

சென்னையில் இவர்கள் போய் இறங்கிய உடன் கூச்சல் போட ஆரம்பித்தானே பார்க்க வேண்டும் சீமந்த புத்திரனான சங்கர்.

''தடித் தடியாக மூன்று பிள்ளைகள் இருக்கும்போது நீங்கள் தனியாகக் குடியிருந்தால் ஊரில் உள்ளவர்கள் எங்களைச் சும்மா விட்டு வைப்பார்களா? பெற்ற அம்மா அப்பாவை வைத்துக் காப்பாற்றக் கூட லாயக்கில்லாதவர்கள் என்ற பட்டத்தை எங்களுக்கு நீங்கள் வாங்கிக் கொடுக்க என்ன சதித் திட்டம் போடுகிறீர்களா?'' என்ற சங்கர் போட்ட இரைச்சலில் நடுங்கிப் போன தம்பதிக்குப் பிள்ளையை எதிர்த்துக் கொள்ளத் துணிவில்லை.

என்ன இருந்தாலும் மூத்த பிள்ளை. நாளைக்குத் தங்களுக்குத் தலையைக் காலை வலித்தால் அவன்தானே கவனித்துக் கொள்ள வேண்டும். மேலும் நாற்பது வயதைத் தாண்டிய சங்கரின் மனைவிக்கு இனிமேல் வேலையெல்லாம் ஒன்றும் கிடைக்காது. அப்படியே கிடைத்தாலும் அவர்களின் பெண்கள் இருவரும் கைக்குழந்தைகள் அல்லவே என்ற தைரியத்தில் இந்த ஏற்பாட்டுக்குச் சம்மதித்தார்கள்.

இவர்கள் வந்திறங்கிய அன்றே சங்கர் ஆபீஸ் டின்னருக்கு மனைவியை அழைத்துக் கொண்டு புறப்பட்டான். ''ரொம்ப நாட்களுக்குப் பிறகு இன்னிக்குத்தான் உங்கள் நாட்டுப் பெண் என்னுடன் வெளியில் வருகிறாள். இந்திரா நகரில் வீடு வாங்கினாலும் வாங்கினோம், பெண்களைத் தனியாக விட்டு விட்டு ஓரிடத்துக்குப் போக முடியவில்லை'' என்று சொல்லிக் கொண்டே சர்வ அலங்காரத்துடன் வந்த மனைவியை அழைத்துக் கொண்டு டின்னருக்குப் போன சங்கரைப் பார்த்துக் கோபத்துடன் பல்லைக் (பொய்ப் பல்லைக்) கடித்தாள் ஜானகி மாமி.

அப்புசாமி அவர்களோ ''தினமுமா போகப் போகிறார்கள்? என்றைக்காவது ஒரு நாளைக்குத்தானே ஆபீஸ் டின்னர் வரப் போகிறது?'' என்று மனைவியைச் சமாதானம் செய்யும் சாக்கில் தம்மைத் தாமே சமாதானம் செய்து கொண்டார்.

ஆனால் நடந்தது என்னவோ வேறு விதமாகத்தான். தினமும், சங்கர், மனைவியை அழைத்துக் கொண்டு தன் பெற்றோரைப் பெண்களுக்குத் துணையாக வீட்டில் வைத்து விட்டு, கச்சேரி, பீச், நாடகம், சினிமா என்று மாற்றி மாற்றிப் போக ஆரம்பித்தான். அப்படிச் சென்னையில் வேறு ஒரு நிகழ்ச்சியும் நடக்காவிட்டாலும் பெரிய உத்தியோகத்தில் இருக்கும் சங்கருக்கு வாரத்தில் ஒரு நாளாவது ஆபீஸ் பார்ட்டி நிச்சயமாக உண்டு.

ஜானகி – அப்புசாமி தம்பதியருக்குப் போதும் போதும் என்று ஆகிவிட்டது. வயதான பெற்றோர்களை ''எனக்கு வேண்டாம் பூசணிக்காய்'' என்று பிள்ளைகள் ஒதுக்கிவைக்கும் காலம் மாறிப்போய், இன்றையத் தலைமுறைப் பிள்ளைகள் அதே பெற்றோரைத் தங்கள் சுயநலத்துக்காகத் தாஜா செய்து தங்களுடன் வைத்துக் கொள்ளும் கொடுமையை இனியும் பொறுத்துக்கொள்ளக் கூடாது என்ற உறுதியான தீர்மானத்துக்கு வந்தார்கள் ஜானகி–அப்புசாமி தம்பதியர்.

இந்தத் தீர்மானத்தை நிறைவேற்றுவதற்காக மாபெரும் சதித் திட்டம் ஒன்றைத் தீட்டினார்கள். அதன்படியே ஒரு ஞாயிற்றுக் கிழமையன்று குடும்பம் முழுவதும் ஹாலில் உட்கார்ந்து கொண்டு சுவாரஸ்யமாக டி.வி.யில் சினிமா பார்த்துக் கொண்டிருக்கும் பொழுது, தங்கள் உடைமைகளை எடுத்துக் கொண்டு ரகசியமாக ஒருவரிடமும் சொல்லாமல், கொள்ளாமல் பின்புறமாக வீட்டை விட்டுப் புறப்பட்டு விட்டார்கள், ஜானகி மாமியும் அப்புசாமி மாமாவும்.

பெற்றோர்களுக்குத் தெரியாமல் திருட்டுத்தனமாகக் கல்யாணம் செய்து கொள்வதற்காக வீட்டை விட்டு ஓடிப்போகும் டீன் ஏஜ் காதலர்கள் போன்று உற்சாகமாக ஜானகி அப்புசாமி தம்பதி இளமை வேகத்துடன் ஓடிப்போய் மதுரைக்குப் போகும் ரயிலில் இடம் பிடித்தார்கள்!



**குடந்தை ஜுபிடர் தியேட்டர் வாசலில் உள்ள அறிவிப்பு.**

தங்களிடம் உள்ள பிளேடுகளின் கூர்மையை எங்கள் தியேட்டர் சீட்டுக்களைக் கிழித்துத்தான் பரிசோதனை செய்ய நினைத்தால் எங்களுக்கு எவ்வித ஆட்சேபமும் இல்லை. சிலசமயம் தாங்களே அதே சீட்டில் அமர நேரிடும்போது தங்களுக்கு ஏற்படும் அசௌகரியத்திற்காக இப்போதே வருத்தப்படுகிறோம்!

-தகவல்: இரா. அசோகன்



# நீயா?

**14**

இன்ஸ்பெக்டரை விட்டு, ஆட்டோவில் ஏறி, திரும்புகையில் ஒரு தெருவில் கல்லாவில் கங்குலி தெரிந்தார்.

'நிறுத்தப்பா' என்று சொல்லி இறங்கிக் கொண்டு, ''ஹலோ'' சொன்னான்.

''வாங்க சார்'' என்றார் மகிழ்ச்சியாக. ''என்ன சாப்பிடுறீங்க?''

பாரில் கூட்டமே இல்லே. பாதி நாற்காலி காலியாகக் கிடந்தன. இருந்தும் உதவிக்கு ஆளில்லாமல் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தார்.

''பிரெட் ஜாம் தரட்டுமா?''

''குடுங்க.''

வாங்கிக் கொண்டு கல்லா அருகில் நாற்காலியில் உட்கார்ந்து கொண்டான். அவரை நன்றாகப் பார்த்தான். அப்பாவியாகத் தெரிந்தார்.

கீழ்க் கோடியில் ஒரு பயல் சம்சாவோ ஏதோ கேட்டான். கொடுத்து விட்டு வந்து எதிரே உட்கார்ந்தார்.

''என்ன சார், ஏதாவது கண்டு பிடிச்சீங்களா?'' என்றார்.

''எங்கே ஸார் கண்டு பிடிக்கிறது? எங்கே கண்டுபிடிச்சுடுவேனோன்னு பயந்துதானே என்னையே குளோஸ் பண்ணப் பார்த்தீங்க!''

''சாமி, சாமி — சத்தியமா நான் அதுக்கு ஜவாப்தாரியில்லே'' என்றார்.

''உங்க ஆள் ராமு பின்னே ஏன் என்னைச் சுட்டான்?''

''எனக்குத் தெரியாது, ஐயா — சத்தியமா தெரியாது.''

''தெரியாது?'' கண்களை உறுத்துப் பார்த்தான்.

''இந்த பன் பட்டர் ஜாம் ஆணையாகத் தெரியாது.''

சிரித்துவிட்டான். ''இதுதான் எனக்கு இப்ப சோறு போட்டுக்கிட்டு இருக்கு சார்— அதனாலே இதுதான் என் தெய்வம். அதனாலேதான் அது மேலே — என் பொழைப்பு மேலே ஆணையாச் சொன்னேன்.''

''அவனை நீங்க போயிப் பார்க்கலேயா?''

''இல்லே.''

''ஏன்?''

''நான் ஏன் அவனைப் போய்ப் பார்க்கணும்? என் ஆளா? நான் ஏவி விட்டவனா? அவனைக் காப்பாத்த எனக்கு என்ன கடமை?''

''அவனை ஜாமீன்லே கொண்டாறப் போவீங்களா?''

''நான் எதுக்குப் போகணும்?''

''மிஸ்டர் கங்குலி — எல்லாத்துக்கும் நான் யாரு, நான் எதுக்குப் போவணும்னு இந்தத் தினுசுலேயே பேசிக்கிட்டிருந்தா பிரயோசனம் இல்லே — — இன்ஸ்பெக்டர் கோபாலன் எல்லாத்தையும் குடைஞ்சு கொண்டாந்துடுவாரு.''

''கொண்டாரட்டுமே எனக்கென்னபயம்?''

''உங்க பூர்வோத்ரம் எல்லாம் வந்துடும் மிஸ்டர் கங்குலி.''

''வரட்டுமே.''

''மறுபடியும் இதே மாதிரி பேசறீங்களே சட்'' — எழுந்து கொண்டான். ''சரி, ஒரே ஒரு கேள்விக்குப் பதில் சொல்லுங்க. மெட்ராஸிலே மாறு பெயர்லே கமல்நாத் இருக்கார்ங்கிறதை நீங்க எப்படிக் கண்டு பிடிச்சீங்க?''

திடுக்கிட்டார். மேஜை மீது போட்டிருந்த கைகள் நடுங்கின. முகம் வெளுத்தார். சமாளித்துக் கொண்டு சொன்னார்: ''ஓ, அதைக் கேக்கறீங்களா? நம்ப ராமு கிட்டே எப்பவோ ஒரு வாட்டி கமல் பற்றிய அடையாளங்கள், எனக்கும் அவருக்கும் இடையே உள்ள பணப் பிரச்னை எல்லாவற்றையும் சொல்லி யிருந்தேன். இரண்டு வாரத்துக்கு முந்தி யாரோ சொந்தக்காரங்க செத்துட்டாங்கன்னும் பட்டணத்துக்குப் போனான். திரும்பி வந்ததும் 'ஸார், நீங்க சொன்ன கமல் ஆளு மெட்ராஸ்லேதான் இருக்காரு'ன்னான். நான் கேள்வி மேல் கேள்வி கேட்டு அவன் சொல்ற ஆசாமி, நான் தேடிக்கிட்டிருக்கிற கமல்தான்னு தெரிஞ்சுக்கிட்டேன்.''

''அட்ரஸ் கொடுத்தானா?''

''டெலிபோன் நம்பரே கூடக் குடுத்தான்.''

''டிரங்கால் போட்டீங்களா?''

''போட்டேன்.''

''என்ன கேட்டீங்க?''

''என் பணத்தைக் குடுத்துடும்படி கேட்டேன்.''

''மிரட்டினீங்களா?''

''இருக்கலாம்... லேசா மிரட்டாட்டா யாரு ஸார் இந்தக் காலத்துலே பெரிய தொகையைக் கொடுக்கச் சம்மதிப்பாங்க?''

''சம்மதித்தாரா?''

''சம்மதிக்க வைத்தேன்.''

''பணம் அனுப்புவதாகச் சொன்னாரா?''

''இல்லே; நேரில் வருவதாகச் சொன்னார்.''



''ஹோட்டல் நிர்மலாவிலே தங்கப் போறதாச் சொன்னாரா?''

''இல்லே. நேரே என் 'பாரு'க்கே வருவார் என்றே நினைத்தேன்.''

''இந்தச்சம்பாஷணை நடந்தபோது உங்கள் அருகில் யார் இருந்தார்கள்?''

''யாரும் இல்லே.''

''கமல்நாத் எப்போது வரப்போகிறார் என்பதை யாரிடமாவது சொன்னீர்களா?''

''சொல்லவில்லே.''

''உங்களுக்கு பெண் பி.ஏ. உண்டா?''

''நம்ப தொழிலுக்கு அதெல்லாம் எதுக்குங்க?''

''நீங்கள் கமல்நாத்தை...'' என்று மகேஷ் ஏதோ கேட்க ஆரம்பித்தபோது கதவு புயலாகத் திறக்க இன்ஸ்பெக்டர் கோபாலன் உள்ளே இன்னொரு புயலாக வந்து. ''ஓ. மகேஷ்'' என்று கூவித் திகைத்தார்.

''என்ன மிஸ்டர் இன்ஸ்பெக்டர்?''

''சொல்கிறேன்'' என்று திரும்பி கங்குலியை ஆழமாகப் பார்த்தார். ''வெய்— கங்குலி — ராமு இங்கே வந்தானா?'' என்றார்.

''ஆசுபத்திரியிலே இருக்கிற ஆளு எப்படிங்க வர முடியும்?''

''அட சட், கேட்டதுக்குப் பதில் சொல்லுய்யா. எங்கய்யா அவனை ஒளிக்க வச்சிருக்கே'' அதட்டினார். பின்னாலேயே வந்த இரு போலீஸ்காரர்கள் நாலாபுறமும் விரைந்தார்கள்.

''அவன் இங்கே வரலீங்க.''

''இன்ஸ்பெக்டர், ராமு—''

''ஆசுபத்திரியிலேருந்து சற்று முன் தப்பிச்சுக்கிட்டு ஓடிட்டான் மகேஷ்.''

''ஓ'' என்று கூவினான் மகேஷ்.

போலீசார் திரும்பி வந்தார்கள். ''உள்ளே எல்லாம் பார்த்துட்டோம். இல்லே சார்!'' என்றார்கள்.

மகேஷின் மூளை கிடுகிடுவென்று வேலை செய்தது. ''இன்ஸ்பெக்டர், ஒரு வினாடியைக் கூட நாம வேஸ்ட் பண்ணக் கூடாது. ஆசுபத்திரியிலேருந்து அவன் நேரே என் ரூமுக்குத்தான் போயிருப்பான். கடவுளே, அங்கே நிர்மலா தனியா இருப்பாளே— வாங்க ஸார்'' என்று வெளியே ஓடினான்.

மூன்று நிமிஷத்துக்குள் ஹோட்டல் நிர்மலாவுக்கு வந்து நுழையும்போது மழை தூரத் தொடங்கியது. ஆகாசத்தில் இடி உருண்டது.

படிகளில் விரைந்து, தாழ்வாரத்தில் ஓடி அறைக் கதவைத் தொட்டபோது தானாகவே திறந்து கொண்டது. உள்ளே—

திடுக்கிட்டார்கள். நிம்மி கை கால்களை விரித்துக் கொண்டு பிணமாகக் கிடந்தாள். அவள் கழுத்தில் ஒரு கைக்குட்டை இறுக்கப்பட்டிருந்தது.

''— காரியம் மிஞ்சி விட்டது கோபாலன்!'' — மகேஷ் கத்தினான்.

இன்ஸ்பெக்டர் கீழே மண்டியிட்டு அவளைத் தொட்டுப் பார்த்தார். சூடு இருந்தது. ''இறந்து கொஞ்ச நேரம்தான் ஆகிறது'' என்றார்.

நிமிர்ந்தார்: ''மகேஷ், இப்போதான் உயிர் போயிருக்கிறது. ஸோ, கொலையாளி

இங்கேதான் பக்கத்தில் எங்கோ இருக்கிறான். உஷாரானார்கள். விஷயங்கள் புரியத் தொடங்கிவிட்டது போலிருந்தது. பகலில் நிம்மியுடன் பேசிக் கொண்டிருந்தபோது, சுட்டது கூட அவனைக் கொல்ல அல்ல; அவனைத்தான் தீர்த்துக்கட்ட வந்திருக்கிறான்!

ஏன் அவன் நிம்மியைத் தீர்த்துக்கட்ட முயன்றான்?

கமல்நாத் பற்றி நிம்மி ஏதாவது சொல்லிவிடுமுன் அவனைத் தீர்த்துக் கட்ட நினைத்தானா? நிம்மிக்குப் பயந்தானா? அவனைப் பற்றி நிம்மிக்குத் தெரிந்திருந்ததா? நிம்மியைக் கொல்லத்தான் மீண்டும் வந்தானா?

இன்ஸ்பெக்டர், கங்குலி, மகேஷ் மூவரும் எழுந்து நாலாபுறமும் அவனைத் தேடி ஓடினார்கள். ஜன்னல் பின் பக்கமாக இருந்தது. திறந்திருந்தது.

மகேஷ்சந்தேகப்பட்டு ஓடிஎட்டிப்பார்த்தபோது ஜன்னலிலிருந்து கீழே சரிந்து சென்ற கூரையின் முடிவில் ஏறத் தொடங்கிய இன்னொரு கூரையில் ஒரு ஆள், கறுப்பாக, மங்கலாகத் தொத்திச் செல்வது தெரிந்தது.

மகேஷை ஜன்னலில் பார்த்துவிட்டு அங்கிருந்தே சுட்டான் அவன். சட்டென்று நகர்ந்து குண்டுக்கு வழிவிட்ட மகேஷ், ''இன்ஸ்பெக்டர், கீழே முற்றத்துக்கு உங்கள் ஆட்களுடன் போய்த் தயாராக இருங்கள்'' என்று கூவிக் கொண்டே சரிவில் இறங்கினான்.

''முட்டாளே! என்ன காரியம் செய்கிறாய்! அவனிடம் துப்பாக்கி இருக்கிறது'' என்றார் கங்குலி.

''தெரியும். ஆனால் அதில் இனிமேல் குண்டு இருக்காது.'' — மகேஷ் சரிவில் சரசரவென்று இறங்கினான். மழை வலுக்க ஆரம்பித்து விட்டது.

ஆகாசத்தின் மங்கிய வெளிச்சத்தில், எதிரி காயம்பட்ட இடது தோளைப் பிடித்துக் கொண்டு கூரை விளிம்பில் நின்று, முன்னேறி வரும் மகேஷைத் தடுக்க வழி தெரியாமல் தவிப்பதை உணர்ந்து.

மேலும் முன்னேறுகையில், தற்காலிகத் தடுப்பாக, காலித் துப்பாக்கியை அவனை நோக்கி வீச—

அதை லாகவமாக காட்ச் பிடித்துத் தூக்கி எறிந்துவிட்டு, 'எதிரி' மீது பாய்ந்து, இருவருமாய்க் கட்டிப் புரண்டு, தடதடவென்று கூரையில் உருண்டோடி.

'தொபீர்' என்று ஹோட்டல் முற்றத்தில் விழுந்தார்கள். கூரை தாழ்வாக இருந்ததால் பிழைத்தார்கள்.

மகேஷ் விருட்டென்று எழுந்து 'எதிரி'யை இனி உயிரோடு பிடிக்க முயலுவதில் அர்த்தமில்லை என்று நிதானித்து, தன் துப்பாக்கியை எடுத்துச் சுடப் பார்க்க,

'எதிரி' அவன் மீது ஒரு 'டைவ்' அடித்து மார்பில் ஏறி அழுத்திக் கொண்டு அவன் ரிவால்வரைப் பறித்துக் கொண்டு மண்டைக்கு நேராகக் குறி பார்க்க—

கோபாலன் தக்க சமயத்தில் எதிரியைச் சுட—

மகேஷை ஒரு உதறு உதறிவிட்டு எதிரி கீழே ஒரு பயங்கரக் கூச்சலிட்டவாறு சாய்ந்தான். எல்லாம் விநாடிகளில் நடந்துவிட்டன!

வந்து பார்த்தார்கள். ரத்தம் ஆறாகப் பெருகியிருந்தது. அவன் — 'ராமு' — உடல் விசுக் விசுக்கென்று இரண்டு தடவை வெட்டி இழுத்தது. அப்புறம் குளிர்ந்து போனான்.

''மகேஷ்!'' — ஓடிவந்து தூக்கினார் இன்ஸ்பெக்டர். முழங்காலில் அடிபட்டிருந்தது. காயத்தில் எரிந்தது. கூட்டம் கூடிவிட்டது.

''டாக்டரைக் கூப்பிடட்டுமா?''

''வேண்டாம். முதலில் கூட்டத்தை விரட்டுங்கள்.''



அருள்வாக்கு

## நம் மதம் தழைக்க

ஒருவன் சண்டை போட்டு மதம் மாற்றுகிறேன் என்றால் எதிர்த்துப் படை திரட்டிச் சண்டை போட என்றால் ஆகாது. அல்லது கோடி கோடியாய்ச் செலவழித்து ஆஸ்பத்திரி ஸ்கூல் வைத்து ஒருத்தன் மதமாற்றம் செய்கிறான் என்றால் அதைப் போல் கோடிக் கணக்கில் செலவழிக்க எனக்கு ஐவேஜியில்லை. இது இரண்டும் இருப்பதாகவே வைத்துக் கொண்டாலும் கூட இதனால் செய்யும் மாறுதல் உண்மையானதும் (genuine) இல்லை. அது நிலைத்து நிற்காது. ஏனென்றால் நம்மைவிடவும் பலிஷ்டர்களாகவோ நம்மைவிடவும் ரொம்பப் பண வசதி உள்ளவர்களாகவோ இன்னொரு கூட்டம் வந்தால் அது நாம் பலத்தாலும் பணத்தாலும் செய்ததையெல்லாம் அழித்துவிட்டுத் தானே ஜயித்துவிடும். ஆனபடியால் இந்த வெளி சக்திகளை நம்பிக் கொண்டிராமல் நம் ஆத்ம சக்தியை நம்பி உள்ளுக்குள்ளேயே நம்மை உயர்த்திக்கொள்வதே நாம் செய்ய வேண்டியது. அப்போது எந்தப் பிரசாரமும் சண்டையும் வசியமும் இல்லாமலே நம் மதம் தழைத்து வாழும்.

—ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சந்திரசேகரேந்திர ஸரஸ்வதி சங்கராச்சாரிய ஸ்வாமிகள்



# Agfa Photography at 3m.



The Agfa Isoly-II takes perfect snapshots at close range. Set the aperture to f/8 to get just the right amount of light to the film. Set the shutter speed at 1/30 second, just fast enough to avoid camera shake. Shoot from a distance of 3 m. on slow film — 125 ASA — for greater sharpness. The result? A perfect close-up every time.

The Agfa Isoly-II is a great all-round camera. You simply adjust settings, distance and film to freeze a sports scene forever, capture every detail, near or distant, of a landscape or take a perfect picture in dim, soft light.

The Agfa Isoly-II is built to German specifications and undergoes over 100 exacting tests. See this fine camera soon at your friendly Agfa-Gevaert dealer.

**ISOLY-II**

***for professional results.***







**AGFA-GEVAERT INDIA LIMITED**

Registered Office: Merchant Chamber, 41 New Marine Lines, Bombay 400020 • Branches:Bombay New Delhi • Calcutta • Madras • ® Registered Trademarks of Agfa-Gevaert, Antwerp/Leverkusen.

**1st for everything in photographics**

SIMOES/AG/5A/80

விரட்டினுர்கள். ''இன்ஸ்பெக்டர், என்னை மெதுவாகத் தூக்கி என் அறைக்குக் கொண்டு போங்கள் — அவசரம்; உடனே போக வேண்டும்.''

கொண்டு போனுர்கள்.

ஒரு போலீஸ்காரர் நிம்மியின் உடம்புக்குக் காவலாக அறை வாசலில் நின்ருர். மகேஷ் உள்ளே போய், இங்குமங்கும் தேடினுன்.

கட்டிலின் அடியில் அவன் தேடிய பொருள் கிடந்தது.

ஓடிப்போய் எடுத்தான். நிம்மியின் சிவப்பு நிற வானிடி பாக்.

அவசரமாகத் திறந்து எதையோ தேடினுன்.

முகப் 'பூச்சு உபகரணங்கள், ஒரு லிப் ஸ்டிக் ட்யூப், கொஞ்சம் சில்லறைகள், சின்னதாக ஒரு சீப்பு, கண்ணுடி — கடைசியில் நாலாக மடித்த ஒரு காகிதம் — ஒரு ரசீது— மகேஷின் கண்கள் பளபளத்தன.

''நிம்மி! நீயா, நீயா!''—

உள்ளே வந்தார் கோபாலன். ''கங்கிராஜுலேஷன்ஸ் மிஸ்டர், மகேஷ். கடைசியிலே கமல்நாத்தைக் கொன்றவனைப் பிடிச்சுட்டீங்க.''

''ஐயய்யோ! கை வலிக்குது. விடுங்க.''— விடுவித்துக் கொண்ட மகேஷ், ''ஸாரி, இன்ஸ்பெக்டர்! கமல்நாத்தைக் கொன்றவனை என்னுலே பிடிக்க முடியலே; நிம்மியைக் கொன்றவனைத்தான் பிடிக்க முடிஞ்சுது... கமலேக் கொன்றவன் தப்பிவிட்டான்'' என்ருன்.

''கடவுளே—இன்னும் கதை முடியலேயா?'' என்ருர் இன்ஸ்பெக்டர்.

''முடிஞ்சுடும்; சீக்கிரம் - ஒன் மோர் சாப்டர் பாலன்ஸ். இரண்டு விஷயம் கிளியரா யிட்டா கதை முழுக்கவும் சொல்லிடுவேன்— யூ ஹாவ் டு வெயிட் டில் டுமாரோ — இப்ப என்னைக் கொஞ்சம் தனியா இருக்க விட நீங்களா?'' என்ருன்.

''ரைட் -- காலேயிலே பார்ப்போம்'' — போனுர் கோபாலன்.

டாய்லெட்டுக்குப் போய் மூஞ்சியை அலம்பிக் கொண்டான். சூடாக ஒரு கப் ஓவல் தருவித்துக் குடித்தான்.

கீழே யோசனையுடன் மெதுவாக இறங்கினுன். லவுஞ்ச் காலியாக இருந்தது. ஆபரேட்டர் கூப்பிட்டு, ''ஸார், நீங்கதானே மகேஷ் — உங்களே மெட்ராஸிலிருந்து கூப்பிடருங்க'' என்ருன்.

எடுத்து ''ஹலோ'' என்ருன்.

''நடேஷ் பேசறேம்பா. அந்த 'அக்பருக்கு ஜே'யைக் கண்டு பிடிச்சுட்டியா?'' என்ருன் நடேஷ்.

''இன்னும் இல்லே.''

''நான் கண்டு பிடிச்சுட்டேன் — அதே மாதிரி ஒரு தந்தியை எழுதி எடுத்துக்கிட்டு, ஒரு தந்தி சேவகன் மாதிரி போயி—''

''யார் கிட்டே—''

''அதாம்பா — தந்தி குடுத்த அந்தப் பொம்பளே கிட்ட—''

''எந்தப் பொம்பளே?''

''கமலா.''

(தொடரும்)



# வாழ்வா? சாவா?

மருத்துவத் துறையில் விஞ்ஞான ரீதியாக இன்று ஏற்பட்டுள்ள முன்னேற்றங்களே பெரிய பிரச்னையையும் தோற்றுவித்துள்ளன அமெரிக்காவில்: இறக்கும் நிலேயில் உள்ள ஒருவரின் உயிரைப் பிரிய விடாமல் உபகரணங்கள் உதவியோடு நீடிக்கச் செய்ய வேண்டுமா?

'நோயாளிகளின் உயிர் காப்பது எங்கள் கடமை' என்கின்றனர் சில டாக்டர்கள். 'உயிர் காத்து என்ன பயன்? அந்த நோயாளியை நிம்மதியாகச் சாகவிடாமல் ஒன்றுக்கும் பிரயோஜனமில்லாதவஞக நாட்கணக்கில் மாதக் கணக்கில் படுத்த படுக்கையாக வைத்திருப்பதில் என்ன லாபம்? சித்திரவதைதானே' என்கின்றனர் வேறு சிலர்.

இரண்டு பவுண்டு எடையில் பிறந்த குழந்தையின் உயிரைக் காக்க இன்று டாக்டர்களால் முடியும். ஆனுல் குழந்தை ஆரோக்கியமாக வளரும் என்ற உத்தரவாதமில்லே. அவ்வாறிருக்கக் குழந்தையைக் காப்பது அவசியம்தாஞ? கிழங்கள் காலனுடன் போராடியபடியே மாதக் கணக்கில் உயிர்ப் பிணமாக ''வாழ்வது'' எதற்காக?

இந்தப் பிரச்னேக்குப் பதில் காண இன்று பல அமெரிக்கர்கள் தங்கள் கருத்தை வெளிப்படுத்தி சாஸனம் எழுதுகிருர்கள்: 'நோய், விபத்து அல்லது வயது காரணமாய்த் நாங்கள் நினைவிழந்து போய் மரணம் நெருங்கிஞல் அனுவசியமாக உயிரைச் செயற்கை முறையில் நீடிக்கச் செய்ய வேண்டாம்; சாக அனுமதிக்கலாம்' என்று எழுதிக் கையெழுத்துப் போட்டு, சாட்சிக் கையெழுத்துடன் பத்திரத்தை ரிஜிஸ்தர் செய்து நெருங்கிய பந்துக்களிடம் கொடுத்து வைக்கிருர்கள்!

— நியூஸ் வீக்

படம்: சிறுநீரகங்கள் பழுதான நங்கைக்கு டயலிஸிஸ் சிகிச்சை

## கல்லில் மலர்ந்த காவியம்: 4

# ஸ்ரீரங்கம்

வைணவத் தலங்களிலே முதன்மை யானது. கோயில் என்றால் அது திருவரங்கமே! ஏழு பிரகாரங்கள் கொண்ட பெருங்கோயில். எண்ணற்ற சிற்பங்களால் சிறந்து மிளிர்வது. பத்து ஆழ்வார்களால் பாடிப் பரவப் பெற்றது. எம்பெருமானார் என்னும் இராமானுஜ ரின் ஆன்மார்த்த ஸ்தலம். பச்சை மா மலை போல் மேனியும், பவளச் செவ்வாயும், கமல மலர்க் கண்ணுமாகப் பள்ளி கொண்ட பெருமாள் அருள் சுரக்கும் திவ்ய தேசம். சோழ, பாண்டிய, பல்லவ, ஹொய்சாள, நாயக்க மன்னர் களால் திருப்பணி செய்யப் பெற்றுச் செழித்த புனிதப் பதி. அவர்களால் படைக்கப்பெற்ற சிற்பச் செல்வங்கள் மகோன்னதமான கலைக் கருவூலங்க ளாகும். மண்டபங்களில் காணப்பெறும் தூண்களின் சித்திர விசித்திரங்கள் கண் கொள்ளாக் காட்சியாகும்.

குதிக்கும் குதிரைகளின் கொட்டத்தை அடக்கும் வீரர்களின் கொற்றத்தையும், திலகமிட்டுக்கொள்ளும் சீமாட்டியின் செவ்வியையும், சீறியாழ் மீட்டும் நங்கையின் சிறு முறுவலையும் நோக்குங்கள்!

திலகவதியின் இடையில் உள்ள அணிகலையும் நோக்குங்கள். மேகலையும், இடை செறியும், சதங்கை மணிக் கோவையும் எவ்வளவு கலைநயத்துடன் அழகாக நம் உள்ளத்தைக் கவர்கின்றன?



நமது முன்னோர்கள் நமக்குப் பாரம்பரைச் சொத்தாக அளித்துவிட்டுச் சென்றுள்ளது இந்த கலைப் பொக்கிஷங்கள். இன்றைய மதிப்பீட்டில் இச் சிற்பங்கள் பல கோடி ரூபாய்க்குச் சமம்.

இந்த அரிய பொக்கிஷத்தைக் கட்டிக் காப்பாற்றிப் போற்றி, வரும் தலைமுறையினருக்கு அளிப்பது நம் கடமை; நமது பண்பு.

தலைமுறை தலைமுறையாக வந்த கலைப் படைப்பின் அடிப்படை தூய்மை என்னும் பக்தியும், நேர்மை என்னும் சக்தியும் தான்! அந்த அடிச்சுவட்டைப் பின்பற்றுவது நமது லக்ஷ்மி மில்ஸ். "செய்யும் தொழிலே தெய்வம்; அதில் நேர்மையே எங்கள் செல்வம்" என்ற குறிக்கோளுடன் மக்களுக்குச் சேவை செய்வதையே தனது தலையாய கடமையாகக் கொண்டு விளங்குவது நமது லக்ஷ்மி மில்ஸ்!

# லக்ஷ்மி மில்ஸ்
## கம்பெனி லிமிடெட்
## கோயம்புத்தூர்



# திட்டமிட்டபடியே

## அன்னம்

அந்தப் பெரியவரும் அவர் மனைவியும், பஸ்ஸை எதிர்பார்த்தபடி உள்ளூர் முனிசிபல் சேர்மன் மறைந்துபோன தன் தாயாரின் ஞாபகார்த்தமாகக் கட்டியிருந்த அந்தப் 'பஸ்-ஷெல்டரில்' அமர்ந்திருந்த சமயம்—ஜக்கு அவர்களிடம் பேச்சுக் கொடுத்தான்.

ஜக்கு பார்ப்பதற்குக் கல்லூரி மாணவன் போல் தெரிந்தாலும் வயது முப்பதுக்கு மேல் ஆகிறது. எவரையும் சுலபத்தில் வசியம் செய்யும் புன்சிரிப்பு அவன் முகத்தில் தவழும்.

''ஐயா எங்கே போறீங்க?'' என்று கேட்டான் உரிமையுடன்.

''கும்பகோணம்தான் தம்பி... இப்போ பஸ் வரும்.''

''வரும் வரும்... சோழன் வருவான்... அதிலேயே போங்க... நிக்காமப் போகும்.''

''தம்பி... ரொம்பக் கூட்டமா யிருக்கு. கொஞ்சம் டிக்கட் எடுத்துத் தந்தீங்கன்னு உபயோகமா யிருக்கும்... மாப்பிள்ளை 'காம்ப்' போயிருக்காரு. இல்லாட்டி அவரே வந்திருப்பாரு...''

''உங்க மாப்பிள்ளையா?... இந்த ஊரா? யாரு?... போஸ்டல் இன்ஸ்பெக்டரா?''

''இல்லே தம்பி... இன்கம்டாக்ஸ் இன்ஸ்பெக்டர் வீடு. மகாலிங்கம்னு பேரு... சன்னிதித் தெருவிலே...''

''ஆமாம், ஆமாம்... இரண்டாவது வீடு.. பச்சைக் கிராதி கூடப் போட்டிருக்கும்'' என்று கூடப் பாடினான் ஜக்கு.

''இல்லீங்க தம்பி... நீங்கள் சொல்வது கமர்ஷியல் டாக்ஸ் ஆபீஸர் வீடு. இது முப்பத்தேழாவது நம்பர். கீழ் போர்ஷனில் ஒரு டாக்டரம்மா கூடக் குடியிருக்காங்க... இவுங்க மேலே குடித்தனம்.''

''இப்போ புரியுது... நம்ம மகாலிங்கம்... நாங்ககூட மாலின்னுதான் கூப்பிடுவோம். தங்கச்சி கூட இப்போ...''

''ஆமாம், தர்முவுக்கு இது நாலாவது மாதம்... உங்க சிநேகிதர் சொல்லலியா?... வெட்கமா யிருந்திருக்கும்.''

''ஊரிலிருந்து வரட்டும் நான் பார்த்துக் கொள்கிறேன். இப்படி ஒரு நல்ல சமாச்சாரத்தைக்கூட என்னிடம் சொல்லாமல்... ராஸ்கல்...'' எனச் செல்லமாகத் திட்டினான் ஜக்கு.

சோழன் வந்தான். ''நீங்கள் போய் பஸ்ஸில் உட்காருங்கள்... நான் டிக்கெட் எடுத்து வருகிறேன்'' என்று போனான் ஜக்கு. கட்டணத்தைக் கூடப் பிறகுதான் — பெரியவர் வற்புறுத்தியதின் பேரில் — அரை மனத்துடன் பெற்றுக் கொண்டான்.

பிரயாணத்தின்போது அவன் சேகரித்த விஷயங்கள் பல. பெரியவர் பெயர் நீலமேகம். அவர் மிஸஸ் காமாட்சி. அவருக்குக் கும்பகோணத்தில் நெல் வியாபாரம். ரெட்டிராயர் குளக்கரையில் சொந்த வீடு.

இவை போதும் ஜக்குவுக்கு.

அடுத்த வாரம் மகாலிங்கத்தின் வீட்டைக் கண்காணித்தான் ஜக்கு.

மகாலிங்கமும் தர்முவும்தான் வீட்டில். தர்முவின் உடலில் இருந்த நகைகள் இருபது பவுனுக்கு மேல் தேறும். வீட்டில் இருக்கும் போதுதான் நகைகளை அணிந்து கொள்கிறாள். வெளியில் ஓர் ஒற்றைச் சங்கிலி மட்டுமே!

பத்து நாட்களுக்குப் பிறகு — ஓர் இரவு.

மகாலிங்கம் இரவு எட்டு மணிக்கு வீடு திரும்பி விட்டார். ஒன்பது மணிக்குக் காக்கி உடை அணிந்திருந்த ஜக்கு ''ஸார், டெலிகிராம்'' எனக் கதவைத் தட்டினான்.

மகாலிங்கம் தந்தியை வாங்கினார். ஜக்கு நீட்டிய பேப்பரில் கையெழுத்திட்டுத் திருப்பிக் கொடுத்தார். ஜக்கு தெருமுனையில் காத்திருந்தான்.

அவன் எதிர்பார்த்தபடியே மகாலிங்கமும் தர்முவும் கதவைப் பூட்டிவிட்டு அவசரம் அவசரமாய் பஸ் நிலையத்தை நோக்கிப் போனார்கள். கும்பகோணத்துக்குக் கடைசி பஸ் ஒன்பது மணிக்கு. தந்தியில் அடிக்கப்பட்டிருந்த தபாலாபீஸ் முத்திரை போலி என்று மகாலிங்கம் நிச்சயம் சந்தேகித்திருக்க முடியாது. அத்தனை சுத்தம்.

அவன் கொடுத்திருந்த தந்தியின் வாசகம்: ''அம்மா ஸீரியஸ்... உடன் புறப்பட்டு வருக... நீலமேகம்.''

ஊரடங்கியது. ஜக்கு தன்னுடைய கறுப்புக் கண்ணாடியை அணிந்து கொண்டான். சாவிக் கொத்துடனும், சாக்குப் பையுடனும் மாடி ஏறினான்.

வெளிப் பூட்டு மிகச் சுலபத்தில் திறந்து கொண்டது. அவன் விளக்கைப் போட்டுக் கொண்டான். யார் இருக்கிறார்கள், சந்தேகப்பட? தைரியமாக அலமாரியைத் திறந்தான்.

நினைத்தபடியே அலமாரியில் கோத்ரெஜ் பீரோவின் சாவி கிடைத்தது.

பதற்றப்படாமல், மெதுவாக நகைகள், புடவைகள், வெள்ளிப் பாத்திரங்கள் எல்லாவற்றையும் பையில் அடக்கிக்கொண்டு, பீரோவைப் பூட்டிச் சாவியை இருந்த இடத்தில் வைத்தான்.

திரும்பி வருபவர்கள் – பாவம் உடனே அதிர்ச்சி யடைய வேண்டாமே!

விளக்குகளை அணைத்த பின்னர் – வாயிற் கதவைப் பழையபடியே பூட்டிய பிறகு– அவன் நிதானமாகக் கீழே இறங்கிய போது – ஒரு அரை வட்டமாகப் போலீஸ் காரர்கள் எதிர்நோக்கி நின்றுகொண்டிருந்தார்கள் – மகாலிங்கமும் தர்முவும் உட்படத்தான்.

ஜக்கு எந்தவித எதிர்ப்பும் காட்டாமல் சரணடைந்தான்.

''வெல்டன் மகாலிங்கம்... நீங்கள் மட்டும் சந்தேகப்படாமல் இருந்திருந்தால்...''

''என் மனைவிக்கு அம்மா கிடையாது ஸார்!... காமாட்சி அம்மாள் சின்னம்மா முறை... நீலமேகம்தான் பேச்சுக்குப் பேச்சு மகள்னு சொல்லுவாங்க...''

தந்தி போலி என்று எப்படிக் கண்டு பிடித்தார்கள்? மகாலிங்கம் சொல்லிக் கொண்டிருந்தார்:

''இன்னிக்குப் பகல்தான் அவுங்க ரெண்டு பேரையும் மதுரைக்குப் பஸ் ஏற்றிவிட்டு வந்தேன். கும்பகோணத்திலிருந்து எப்படி தந்தி வரும்?''

ஜக்கு தீர்மானம் செய்து கொண்டான். இனித் திருடுவது இல்லை என்று அல்ல – இன்னும் கொஞ்சம் எச்சரிக்கையாக இருந்திருக்க வேண்டும் என்று!





✖ காவல்காரனில் எம்.ஜி.ஆர்., ஜெயலலிதா

# பொன்மனச் செம்மலும்

## 6

மக்கள் திலகம் எதற்கும் கலங்காமல் சகித்துக் கொண்டு தன்னம்பிக்கை, விடா முயற்சி, உழைப்பு ஆகிய மூன்றாலும் எந்தச் சோதனையையும் வெற்றி கண்டு விடுவார்.

தாம் மீண்டும் கம்பீரமாகப் பேச வேண்டும்; பேசியே தீரவேண்டும் என்கிற வைராக்கியத்தோடு தினமும் வீட்டுக்குள்ளேயே உரத்துப் பேசிப் பயிற்சி பெறுவதில் ஆர்வம் காட்டினார். குரலில் காட்டப்பட வேண்டிய நளினம், ஏற்ற இறக்க வேறுபாடுகள், சிரிக்கும்போதும், அழும்போதும் எழுப்பப்பட வேண்டிய ஒலியின் கார்வைகள் முதலான அனைத்தையும் தம் விடா முயற்சியால் பயிற்சி மூலம் கொஞ்சம் கொஞ்சமாக மறுபடியும் வரவழைத்துக் கொண்டார்.

நாளடைவில் முழுமையான வலிமையும் ஆற்றலும் அந்தப் பேச்சிலே வரப்பெற்றுவிட்ட அவருக்கு 'காவல்காரன்' படத்தில் குரலின் முழுமையான நிறைவை வழங்க முடியாது போயிற்று.

''இதனால் ரசிகர்களுக்கு ஏமாற்றம் ஏற்படும்; படம் வெற்றி பெறாது'' என்று கணித்தார்கள், எதிர்த் தரப்பைச் சேர்ந்தவர்கள்.

இவர்களின் கணிப்புக்கும் ஆசைக்கும் சூழ்நிலையைப் பார்த்தால் அனுகூலமாக இருப்பது போலத்தான் தோன்றும். ஆனால் 'மீரகின்' என்பார்களே அது போல் இவர்களின் கணிப்பைக் கடந்து மகத்தான வெற்றியைத் தழுவிக்கொண்டு விடுவார் மக்கள் திலகம்.

அவ்வாறே காவல்காரன் படம் மாபெரும் வெற்றி கண்டது.

நான் முன்பே சொல்லியிருக்கிறேன். 'மக்கள் திலகம் அவர்களின் நடிப்பை, நடப்போடு இணைத்துப் போற்றுவார்கள் ரசிகர்கள்'' என்று.

எல்லோருக்கும் தெரியும் குண்டு வீச்சால் மக்கள் திலகம் அவர்களுக்கு அப்போது வலுவாகப் பேச முடியவில்லை என்பது.

# பொன்விழா ஆண்டும்

மக்கள் திலகம் அவர்களுக்கும் தெரியும் ரசிகர்கள் தம் நிலையைப் புரிந்து கொண்டு, படத்தை மன நிறைவோடு வரவேற்று விடுவார்கள் என்பது. அதே கோணத்தில் திரு வீரப்பன் அவர்களும் அசைக்க முடியாத நம்பிக்கை உடையவர்.

படம் வெளியாயிற்று. முந்தைய வசூல்களின் சாதனையைப் பல இடங்களில் முறியடித்துப் புதிய ரெக்கார்டு ஒன்றைப் பொறித்தது. அது மட்டுமா? எம். ஜி. ஆர். அவர்களின் மீது அளவற்ற ஒரு பாசத்தை லட்சக் கணக்கான உள்ளங்களில் விதைத்தது!

'பெயர் ராசி' என்று ஒன்று உண்டு. சரக்கு தான் முக்கியம்; அதில் சந்தேமில்லை. ஆனால் மதிப்புள்ள சரக்கு பிரபலமாவதற்குப் 'பெயர்' அமைவது அவசியம்; பொருத்தமாகவும், கவர்ச்சியாகவும் பொருட் செறிவோடும் 'பெயர்' அமைந்து விடுமானால் குறிப்பிட்ட சரக்கு விலை போவதற்கு உத்தரவாதம் உண்டு.

மக்கள் திலகம் அவர்கள் நடித்து வெளி வந்த திரைப்படங்களின் பெயர்களை ஒரு

**வித்துவான் வே. லட்சுமணன்**

# நங்கையர் விரும்பும் நன் மலர்!



முறை கவனியுங்கள். பெரும்பாலான படங்களின் பெயர்களில் மக்களுக்கு அறிவுரை இருக்கும்; மனத்துக்கு உற்சாகம் தரும் ஊட்ட சக்தி இருக்கும். அந்தந்தப் படத்தின் கருப் பொருளின் சிறப்பைப் பிரதிபலிக்கும் பொலிவும் இருக்கும்.

இந்தப் 'பெயர்' விஷயத்தில் தீவிரமான கவனம் செலுத்துவார் மக்கள் திலகம் அவர்கள். ஏனென்றால், இந்தப் பெயர் அமைவதன் மூலம் படத்தின் முழுமையான வெற்றிக்கு வாய்ப்பு உண்டாகும் என்பது அவருக்கு நன்றாகத் தெரியும்.

சில பெயர்களைச் சொல்கிறேன்:

'தாய்க்குப் பின் தாரம்'

இது ஒரு படத்தின் பெயர். அன்னைக்கு அடுத்தபடிதான் ஆருயிர்த் துணைவி என்ற கருத்தைத் தொனிக்க வைத்திருக்கிறார்கள் இந்தப் பெயரில்.

இன்னொரு பொருளும் உண்டு. தாயின் சிறப்பு எவ்வளவு மேலானது என்பதை உணர்த்தி, அதே நேரத்தில், அப்பேர்ப்பட்ட தாய்க்குப் பிறகு முன்வந்து நிற்பவள் தாரம் என்று கூறி மனைவியின் மாண்பையும் விளக்குகிறது இந்தத் தலைப்பு.

''புதுமைப் பித்தன்''

பெயரிலேயே ஒரு புதுமை; பழமைக்கு அடிமையாகி, பத்தாம் பசலியாக இருந்திடக் கூடாது என்ற நோக்கத்தில் அமைந்த புரட்சிப் பெயர் இது. அடுத்து இன்னொரு படத்தின் பெயர்: ' நல்லவன் வாழ்வான்''

ஆம்; நல்லவர்கள் வாழவே செய்வார்கள். இது மறைமொழி.

இந்த மாதிரிப் பெயர் வைக்கப்படும்போது கேட்பதற்கே ஒரு நிறைவு ஏற்படுகிறது. அந்த நிறைவு காரணமாக உள்ளம் குறிப்பிட்ட அந்தப் பெயர் கொண்ட படத்தைப் பார்க்க வேண்டும் என்று நம்மைத் தூண்டவும் செய்கிறது.

''தாய் சொல்லைத் தட்டாதே''

எவ்வளவு சிறப்பான பெயர்! ''நாம் வளரவும் வாழவும் வகை செய்த தாயின் வார்த்தையை மதித்து நடந்தால்தான் எதிர்காலம் ஏற்றமாக இருக்கும்'' என்ற கருத்தைக் குறிப்பிடும் இந்தத் தலைப்பு நமக்கு எச்சரிக்கைசெய்வது போன்று 'தட்டாதே' என்று கம்பீரமாக ஆணையும் பிறப்பிக்கிறது!

இவ்வாறே ஒவ்வொரு படத்தின் தலைப்பும், வீச்சும் ஆழமும் கொண்ட ஒரு கருத்தின் சுருக்கமாக அமையுமாறு கவனித்துக் கொள்வார் மக்கள் திலகம்.

தொழிலாளிக்கு முக்கியத்வம் கொடுத்துப் படத்தின் பெயராக அமைத்தது போல், 'காவல்காரன்', 'விவசாயி', ரிக்ஷாக்காரன்' முதலான சிறப்புப் பெயர்களையும் படப் பெயர்களாக வைத்து மதிப்பளித்திருப்பதையும் குறிப்பிட வேண்டும். படங்கள் ஒவ்வொன்றும் பெயரில் மட்டு மல்லாமல் சரக்கிலும் உன்னதமானவை.

'காவல்காரன்' படத்தின் பெரிய வெற்றிக்கு அடிப்படையான பல காரணங்களில் ஒன்று, அதன் கதை அம்சமும் ஆகும்; அதாவது சத்துள்ள 'சரக்கு'.

இந்தப் படத்துக்குப் பிறகு வெளிவந்த படங்களில் 'குடியிருந்த கோயில்' மகத்தான வரவேற்புப் பெற்றது. இதில் இரட்டை வேடம் ஏற்று, இரு வேறு பாத்திரங்களைப் பிரதிபலித்து அற்புதமாக நடித்தார். மக்களிடையே வெற்றி கண்டதோடு அன்றைய தமிழக அரசின் சார்பில் மக்கள் திலகத்துக்கு ''சிறந்த நடிகர்'' என்ற விருதையும் பெற்றுத் தந்தது இந்தப் படம்.

அடுத்து வந்த படங்களில் குறிப்பிடப் படவேண்டிய படம் ஜெமினியின் ''ஒளி விளக்கு''.

சாதாரணமாகத் திரு எம். ஜி. ஆர். அவர்கள் ஏற்றுக் கொள்கிற பாத்திர இயல்புக்கு மாறுபட்ட ஒரு பாத்திரம் இந்தப் படத்தில் அவருக்கு அமைந்தது. இதனால் அந்த மாறுபட்ட பாத்திரத்தில் தான் நடிப்பதை மக்கள் ஏற்றுக் கொள்வார்களா என்கிற கேள்வியும் பிறந்தது.

புதிய அமைப்புள்ள பாத்திரமாதலால், அதை ஏற்கும் ஆர்வமும், அதில் ஒரு நிறைவும் உண்டாகவே, எம். ஜி. ஆர். அவர்கள், 'எப்படியும் இந்தப் பாத்திரத்தை மக்கள் ஏற்கும் வண்ணம் செய்து காட்ட வேண்டும்' என்று உறுதி கொண்டு உழைத்தார்.

உழைப்பு வீண் போகவில்லை. படம் வெற்றி கண்டது. புது மாதிரியான வேட மாறுதலும் பாணிக்கு மாறுபட்டது என்றாலும் மக்கள் ஏற்றுக் கொள்வார்கள் என்ற ஒரு நல்ல முடிவை உண்டாக்கிய படம் 'ஒளி விளக்கு'!

அடுத்துக் குறிப்பிடப்பட வேண்டிய படம் எம்ஜியார் பிக்சர்ஸ் சார்பில் எம்.ஜி.ஆர். அவர்கள் தயாரித்த 'அடிமைப்பெண்'.

'சமூகத்தின் அமைப்பில் எந்த மனிதனும் தன்னம்பிக்கையுடன் முனைந்தால், எந்த கைய சாதனையையும் செய்துவிடக் கூடும்' என்கிற ஒரு தத்துவத்தை அமைத்து, அதையே கதையின் மையக் கருவாகக் கொண்டு எம். ஜி. ஆர். வழங்கிய படம் இது!

''பலமுள்ள முதுகெலும்பு என்பது எல்லோருக்குமே பொதுவாக இறைவனால் அளிக்கப்படுகிறது. வாழ்வில் ஏற்படக்கூடியவிளைவுகளைச் சமாளிக்கவும், முயற்சியால் வெற்றி பெறவும் இறைவன் தந்துள்ள சக்திகளைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். சக்திகள்

இருந்தும் அவற்றைப் பயன்படுத்திக் கொள்ளத் தவறினால் அந்தக் குற்றத்துக்கு இறைவன் பொறுப்பாளி ஆகமாட்டான்'' என்று பெரியோர்கள் கூறுவதுண்டு.

இந்த உன்னதமான கருத்தையே 'அடிமைப் பெண்' பிரதிபலித்தது.

ஏராளமான பொருட் செலவில் எடுக்கப்பட்ட வெளிப்புறக் காட்சிகள் பலவற்றைப் பெற்றிருந்த இந்தப் படம் ஓர் அற்புதக் காவியமாக மலர்ந்திருந்தது. மக்கள் திலகம் ஏற்றிருந்த பாத்திரமும் விசேஷச் சிறப்பு கொண்டிருந்தது. பிரபல இயக்குனர் கே. சங்கரின் கைவண்ணமும் மக்கள் திலகத்தின் செயல் வண்ணமும் ஒன்று சேர்ந்து மலர்ந்த பொற்றாமரைப் பொய்கை என்று இதைச் சொல்லலாம். வற்றாத கலையூற்றுப் போல், பார்க்கப் பார்க்க அமுத மயமான இன்பத்தை அள்ளி அளித்த படம் இது.

ஜெய்ப்பூர் அரண்மனைக் கோலங்களை ஜாஜ்வல்யமாகப் பொறித்திருந்தார்கள். பிரம்மாண்டமான அரங்கக் காட்சிகள், மேல் நாட்டுப் படங்களுக்கு நிகராக ஒளி வீசின. சிங்கத்துடன் சண்டை போட்டு வெற்றி காண்கிற பயங்கரக் காட்சியும் இதில் இடம் பெற்றிருந்தது. இந்தக் காட்சிக்காகவே சிங்கம் வளர்க்கப்பட்டு வந்தது. எங்கே என்று கேட்கிறீர்களா? ராமாவரம் தோட்டத்திலும் சத்தியா ஸ்டுடியோவிலும் தான்.

இந்தப் படக் கதையின் அமைப்பில் பல சோதனைகள் உண்டு. அவ்வாறே படத் தயாரிப்பிலும் சோதனைகள் ஏராளம். அத்தனையும் கடந்து வெளிவந்த படம் அமோக புகழ் கண்டது.

பிலிம்பேர் ஏட்டின் முதல் தரமான படத்துக்குரிய பரிசைப் பெற்ற படம் இது.

அடுத்து வெளியான படங்களில் 'நம் நாடு' 'என் அண்ணன்', 'எங்கள் தங்கம்' ஆகிய எல்லாமே சிறப்புப் பெற்றவை. குறிப்பாகச் சொல்லப்பட வேண்டிய படம் ''மாட்டுக்கார வேலன்'' இது மிகப் பெரிய வெற்றி பெற்றது.

இந்தப் படத்தை இயக்கியவர் திரு ப. நீலகண்டன்

திருப்பங்கள் உண்டு பண்ணிய 'திருடாதே' 'காவல்காரன்' ஆகிய படங்களுக்கும் இவரே இயக்குநர்.

'மாட்டுக்கார வேலன்' படப்பிடிப்பின் போது நடந்த சம்பவம் ஒன்றைத் திரு ப. நீலகண்டன் என்னிடம் சொன்னது நினைவுக்கு வருகிறது.

இந்தச் சம்பவம் 'வைகை'யில் நடந்தது.

படப்பிடிப்பு 'வைகை'யில் நடைபெற்ற போது, மக்கள் திலகம் அவர்களைக் காணப் பல்லாயிரக் கணக்கான மக்கள் கடல் போல் திரண்டு குழுமினார்கள். கொளுத்துகிற வெய்யில்; தண்ணீரோ கிடையாது. தாகத்தால் மக்கள் தவிக்கிற நிலையைக் கண்டார் எம். ஜி. ஆர். ஒரு முடிவுக்கு வந்தார்.

படத் தயாரிப்பாளர், மற்றும் படத்தில் சம்பந்தப்பட்டவர்கள் யாருக்கும் சொல்லாமல் ஆட்களை அனுப்பி வண்டி வண்டியாகத் தண்ணீரைக் கொண்டு வரச் செய்து அத்தனை மக்களுக்கும் தாக சாந்தி செய்வித்தார். ''தவித்த வாய்க்குத் தண்ணீர் ஊற்றுகிற புண்ணியத்துக்கு நிகரில்லை'' என்பார்கள்.

வாயார, நெஞ்சார வாழ்த்திய ஆயிரக் கணக்கான மக்கள் தங்கள் கண் குளிரப் பொன்மனச் செம்மலைக் கண்டு உளமாரப் போற்றிய அந்தக் காட்சி சாமானியமான ஒன்றாகாது.

''மாட்டுக்கார வேலன்'' பட வெற்றிக்கு மற்றக் காரணங்களுடன் இந்த 'மக்கள் வாழ்த்து' என்கிற மகத்தான காரணமும் ஒன்றாக இருக்கும் என்று என் மனம் எண்ணுகிறது.

''தயாரிப்பாளரிடம் சொல்லித் தண்ணீர் கொண்டுவர ஏற்பாடு செய்திருக்கலாம். தன்னைக் காண வந்தவர்களுக்கு, அவர்கள் லட்சம் பேர் என்றாலும் தானே உதவ வேண்டும் என்கிற நோக்கம் எம். ஜி. ஆருடையது. அதனாலேயே அவர் இரகசியமாக ஏற்பாடு செய்தார்'' என்று ப. நீலகண்டன் அவர்கள் என்னிடம் சொன்னார்.

மேலும் பல சம்பவங்கள் உண்டு. மக்கள் திலகம் அவர்களின் மனிதாபிமானம் என்பது விசேடமான ஒன்று.

ஊனமுற்றவரைக் கண்டால் அவரது உள்ளம் உருகிவிடும். முடவர்களுக்கு அவர் வழங்கிய உதவிகள் பல. மற்றும் எளியவர்களுக்கு இரங்கி எத்தனையோ உதவிகளைச் செய்தவர் அவர். 'உதவுவது' என்பது அவரது பிறவிக் குணம் என்பதை மட்டும் சொல்லிவிட்டு, அடுத்த படம் பற்றிச் சொல்ல ஆரம்பிக்கிறேன். (வளரும்)




''மீனாட்சி புரத்தில் நடந்தது என்ன என்று பார்த்து வர நம்ம ராமுவை அனுப்பினேமே! அவன் ரகீமாகத் திரும்பிவந்துட்டான்.''

---

**தயாரிப்பாளர் :** ''என்னுடைய படம் 'வெற்றிகரமான நூறுவது நாள்...''

**மற்றவர் :** ''என்ன நூறு நாளா ஓடுதா''

**தயாரிப்பாளர் :** ''இல்லே. அப்படின்னு ஒரு படம் தயாரிக்கப் போறேன்!''

-ஏ. கணேசன்

# காதல் திருமணத்தில் நம்பிக்கை உண்டா?






## கடுதி பதில்கள்!

✠ எ. அலெக்சாந்தர்; புளியகுளம்
கே. கவிதையை ரசிக்கத் தெரிந்தவர்களுக்கு எழு தத் தெரியாதது ஏன்?

ப: ஜாங்கிரியை ரசித்துச் சாப்பிடத் தெரிந் தவர்களுக்கு அதைச் செய்யத் தெரியாதது ஏன்?

✠ பி.டி. சிதம்பர சூரிய நாராயணன், பெரியகுளம்
கே. கட்சி மாற்றம், மதமாற்றம், கொள்கை மாற்றம் இவைபற்றித் தங்கள் கருத்து என்ன?

ப: இவைகளுக்கு ஒரே காரணம், தடுமாற்றம். தங்கள் எண்ணத்தின் மேலேயே, நம்பிக் கைகள் மேலேயே தங்கள் எதிர் காலத் தின் மேலேயே ஏற்படும் தடுமாற்றத்தின் விளைவே இந்த மாற்றங்கள். மாறிய பிறகும் தடுமாற்றம் ஏற்படுவதால் மறு படியும் மாறுகிறார்கள்.

✠ ஆர். டி. பாரதமணி, ராசிபுரம்
கே. நீர் ஸெண்ட் போடுவதுண்டா?

ப: ஸென்ட் என்றால் நான் ஆப்ஸென்ட்!

✠ கே. வி. சுகுமார், ஈரோடு
கே. காதல் திருமணத்தில் நம்பிக்கை உண்டா?

ப: உலகில் உள்ள எல்லாருக்கும் காதல் திருமணத்தில் நம்பிக்கை உண்டு. அதற்கு ஆதரவும் தருவார்கள் – அது தம் வீட் டுக்குள் வராதவரை. நான் உலகோடு ஒட்டி வாழ்பவன்.

✠ எஸ், சுப்பிரமணியன், திருமங்கல்
கே. எப்பொழுதும் தன்னைத் தாழ்த்திப் பேசாத அரசியல்வாதிகளைப் பற்றி...

ப: யார்தான் தங்களைத் தாழ்த்திப் பேசு கிறார்கள்? ஒரு மனிதனுக்கு மிகவும் பிடித்த மானது தன்னைப் பற்றிப் பேசுவது. அது வும் உயர்த்திப் பேசுவது. ஏன், தன் குறைகளைக் கூடப் பெருமையாகத்தான் பேசுவான். ''சமையல் நல்லா இல்லாட்டி அப்படியே தட்டோடு விசிறி அடிச்சுடு வேன். இதுதான் நம்ப வழக்கம்'' என் பது போன்ற ஜம்பங்களைக் கேட்டதில் லையா?




✠ ப. மூர்த்தி, பங்களூர்-21
கே. பாடுபட்டுச் சேர்க்க வேண்டியது புகழா, பணமா?

ப: புகழ்தான். பாடுபடாமலேயே பணம் சேர்க்க முடியும்; சேர்க்கிறார்கள். தொடர்ந்து உழைத்துக் கொண்டே இருக்க வேண்டும் புகழ் சேர்ப்பதற்கு. தானே செய்ய வேண்டிய வேலை. ஒரு பாடகர் சென்ற மாதம் பிரமாதமாகப் பாடியதை வைத்துக் கொண்டு இந்த மாதம் புக ழோடு இருக்க முடியாது. இந்த மாதமும் பிரமாதமாகப் பாட வேண்டும். இது எல்லாத் துறைகளுக்கும் பொருத்தம்.

✠ சந்திரா, புதுவை
கே. என்ன நியூஸ்?

ப: ரேகா அமிதாப் பச்சனைத் திருப்பதியில் திருமணம் செய்து கொண்டு விட்டார். இதுதான் என் காதுக்கு எட்டிய கிசுகிசு நியூஸ்.

பரிசு பெறுபவர் :

**எஸ். சுப்பிரமணியன்**
**1/69, தெற்கு வீதி**
**திருமங்கல்**

# அந்தி நேரத்து உதயங்கள்

வாஸந்தி 12

'பீட்டர் பீட்டர் பம்ப்கின் ஈட்டர்,

ஹாட் எ வைஃப் அண்ட் குட்ன்ட் கீப் ஹர்'

''ஏய் மிக்கி இங்கே வா!'' என்று சிரித்தான் ஹரி. ''எங்கிட்ட வந்து உன் பாட்டைச் சொல்லு!''

மிக்கியின் முகத்தில் ஒரு கூச்சப் புன்னகை தெரிந்தது. இடது கன்னத்தில் ஒரு சின்னக் குழி கண்ணாமூச்சி விளையாடிற்று. வலது கை ப்ளாஸ்டருடன் ஸ்லிங்கில் தொங்கிற்று. வலது கால் கட்டையாக ப்ளாஸ்டரில் நீண்டிருந்தது. ஹரியின் பேச்சைக் கேட்டதும் அருகிலிருந்த சக்கர நாற்காலிக்கு லாகவமாக நழுவி உட்கார்ந்து கொண்டான். இடது கையால் நாற்காலியைத் தள்ளிக் கொண்டு ஹரியின் கட்டிலுக்கருகில் வந்தான்.

''என்ன அங்கிள்?''

''எங்கே அந்த பொயமைச் சொல்லு!''

''பீட்டர் பீட்டர் பம்ப்கின் ஈட்டர்



ஹாட் எ வைஃப் அண்ட் குட்டண்ட் கீப் ஹர்
ஹி புட் ஹர் இன் எபம்ப்கின் ஷெல்—''

''இரு-இரு-இதுக்கு அர்த்தம் தெரியுமா?''

''ஊஹூம்.''

''நான் சொல்றேன். பீட்டர்னு ஒரு சாப்பாட்டு ராமன் இருந்தான். அவன் பெண்டாட்டி ஒரு லங்கிணி... அவ தொந்தரவு பொறுக்க முடியாமெ அவளெ ஒரு பரங்கிக்காய் கூட்டுக்குள் போட்டு வைச்சு..''

''எப்படிப் போட முடியும்?''

''போட்டானே!''

''அவ்வளவு பெரிய பரங்கிக் காய் எங்கே கிடைச்சது?''

''சரோஜினி நகர் மார்க்கெட்டிலே! சாந்தி ஆன்டியை வேணுக் கேளு!''

''நிஜம்மாவா சாந்தி ஆன்டி?''

சாந்தி உதட்டைப் பிதுக்கினாள்.

''ஆன்டி மார்க்கெட்டுக்கே போக மாட்டா. அவங்க வீட்டிலே காய்கறி வாங்கறது அங்கிள்தான். நீ உங்கம்மாவைக் கேள் மிக்கி!''

சாந்தி மௌனமாய்த் தன் வேலையைத் தொடர்ந்தாள்.

—மிக்கி தன் அம்மாவைத் தேடிக் கொண்டு போனான்.

''எனக்கு அந்த மாதிரி ஒரு பெண்டாட்டி இருந்தா நானும் அப்படித்தான் பூட்டி வெச்சிருப்பேன் சாந்தி.''

சாந்தி மளமளவென்று அவன் கட்டிலை மறைக்கிற மாதிரி ஸ்கிரீனை வைத்து அவன் சட்டையை அவிழ்த்து உடம்பைத் துடைக்க ஆரம்பித்தாள்.

மெல்லச் சிரித்து. ''நல்ல வேளை, உங்களுக்குப் பெண்டாட்டி இல்லை'' என்றாள்.

''நல்லவேளை எனக்கு இனிமேல் அதற்கு சான்ஸ் இல்லே!''

சட்டென்று மௌனமானாள். தன் வேலையைத் தொடர்ந்தாள்.

''சாந்தி ஏன் பேசாமல் இருக்கீங்க?''

''இப்பவே தீர்மானமாச் சொல்ல முடியாது ஹரி. இன்னும் இரண்டு வாரம் போனப்புறம்தான் டாக்டர் சொல்வார்!''

இவர்கள் எல்லாம் ஏன் இத்தனை நாட்களுக்குத் தன்னை ஏமாற்ற வேண்டும் என்று அவனுள் ஒரு சீற்றம் எழுந்தது.

''எத்தனை நாளைக்குப் போலி நம்பிக்கை கொடுக்கப் போறீங்க?''.

''போலியில்லே – நம்பிக்கைங்கிறது தான் இந்த ரீஹாபிலிடேஷன் டிபார்ட்மெண்ட்டுடைய அஸ்திவாரமே.''

''சரியான பொய் பித்தலாட்ட டிபார்ட்மெண்ட்...''

அவன் சொல்வது அவளுக்குப் பிடிக்கவில்லை என்று அவள் முகம் தெரிவித்தது.

''அதிலே நீங்க ஒருத்தர்தான் நிஜம் சாந்தி.''

''தாங்க்யூ!''

''ஓ! உங்களுக்குக் கூட கோபம் வருமா? நான் என்ன செய்யட்டும்? கையையும் காலையும் உதறிண்டு எழுந்துண்டு போயிடலாம் போல ஆத்திரம் வருது. எத்தனை நாள் இப்படிப் படுத்திருக்கிறதுன்னு கோபம் வரது.''

''இந்தக் கோபமெல்லாம் எனக்கு நிறைய பழக்கம் ஹரி.''

அவள் பரபரவென்று புன்னகை மாறாமல் செய்வதை அவன் ஆச்சரியத்துடன் பார்த்தான். நேர்த்தியாக இயல்பாக வளைந்த புருவங்களுக்கு நடுவில் சாந்துப் பொட்டு பளிச்சென்றிருந்தது. சின்ன இடையும் அளவான மார்பும் அந்த உடைக்குப் பொருத்தமாக இருந்தன. சப்தமே செய்யாத ஆர்ப்பாட்டமில்லாத எத்தனை மிருதுவான அசைவுகள்!

''உங்க ஹஸ்பெண்டுக்குக் கோபம் வருமா சாந்தி?''

அவள் திடுக்கிட்டவள் போல் அவனை நிமிர்ந்து பார்த்தாள்.

பிறகு பார்வையைத் தாழ்த்தி ''ஊஹூம்'' என்றாள்.

சட்டென்று அவனுக்கு அன்று ஊர்மிளாவும் அவள் தோழியும் பேசிக் கொண்டது நினைவுக்கு வந்தது.

''கல்யாணமாகியிருக்கே? ஒரு மிருகத் தோட!''

இவளுள் ஒரு சோகக் கதை இருக்குமா?

"உங்களை முதல் முதல் பார்த்தபோது உங்களுக்குக் கல்யாணமாகியிருக்காதுன்னு நினைச்சேன்."

"நான் எப்படி இருந்தாலும் அது உங்களை எப்படிப் பாதிக்கும்?"

"ரொம்பப் பாதிக்கிறது. இல்லேன்னு என்னைக் கல்யாணம் செய்துக்கிறீங்களான்னு கேட்டிருப்பேன்."

எதிர்பாராமல் கேட்ட ஹாஸ்யம் மாதிரி அவள் பக்கென்று சிரித்தாள்.

"உங்களுடைய விளையாட்டுப் பேச்சுக்கு லிமிட்டில்லாமல் போயிடுத்து ஹரி!"

அவள் பக்கத்தில் இருந்த புத்தகத்தை எடுத்து அவன் கையில் கொடுத்தாள்.

"வேண்டாத கற்பனையில் புத்தி போக வேண்டாம். இதைப் படிச்சிட்டிருங்க. நான் மற்ற பேஷண்ட்டைப் பார்த்துட்டு வரேன். அப்புறம் எக்ஸர்ஸைஸ் சொல்லித் தர்ரேன்"

அவள் ஆஸ்பத்திரி லைப்ரரியிலிருந்து கொண்டுவந்த புத்தகம். ஊனமுற்றோரும் சுய முயற்சியால், மனோ திடத்தால், ஒரு நார்மல் வாழ்க்கை வாழ முடியும் என்று பக்கம் பக்கமாய் வியாக்கியானம். முன் பின் தெரியாத ஒரு பேஷண்டின் முன்னேற்றத்தில் இவளுக்கு எத்தனை ஆத்மார்த்தமான அக்கறை என்று அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது. இனிமேல் இந்த மாதிரி ஒரு மனநிலையை வளர்த்துக்கொள்வதைத் தவிர வேறு வழியில்லை என்று சொல்லாமல் சொல்கிறாளா?

அவன் புத்தகத்தைப் பிரித்தான்—

உறுப்புக்கள் ஊனமடைந்து போவதால் வாழ்வே அஸ்தமித்துப் போய்விட வேண்டியதில்லை. சில கதவுகள் அடைத்துக்கொள்வதால் வேறு கதவுகள் இல்லை என்று அர்த்தமில்லை. அவன் பட்டென்று புத்தகத்தை மூடி வைத்தான். உபதேசம் செய்வது எத்தனை சுலபம்!

சுபாவமான காருண்யத்துடன் பணி புரியும் சாந்தியிடம் எப்படி ஒருத்தன் மிருகத்தனமாக நடந்து கொள்ள முடியும்? நாலைந்து நாட்களாக அவள் ஆஸ்பத்திரியிலேயே இருப்பதை அவன் கவனித்தான். சமயங்களில் இரவுவேளைகளில் அவன் தூக்கம் வராமல் தவித்துக் கொண்டிருக்கும்போது மிருதுவான கை ஒன்று அவன் நெற்றியில் உட்காரும். கண் திறந்ததும் அந்தப் பனிச் சென்ற புன்னகை மனசை மலர்த்தும்.

"இன்னிக்கும் ராத்திரி வீட்டுக்குப் போகலியா?"

"இல்லே, சொன்னேனே, இருபத்து நாலு மணி நேர டியூட்டி பார்க்கிறேன்."

வலியிருந்தால் மருந்தைக்கொடுத்துவிட்டு "தூங்குங்க" என்று இதமாகச் சொல்லி விட்டு மற்ற கட்டில்களுக்கு நகர்வாள். ஃப்ளாரென்ஸ் நைட்டிங்கேலின் மறு பிறவியாக இருக்க வேண்டும் இவள்.

எலக்ட்ரிக் ஷாக் அடித்துக் கொண்டு கால் சுவாதீனமில்லாமல் படுத்திருந்த பக்கத்துக் கட்டில் இளைஞன் விட்டத்தைப் பார்த்துக் கொண்டிருந்தான்.

"ஹல்லோ!" என்றான் ஹரி.

அவன் சட்டென்று திரும்பிப் பார்த்தான்.

அந்த நிறத்தையும் மூக்கையும் கண்ணையும் பார்க்கையில் ஒரு திகைப்பு ஏற்பட்டது. என்ன முகம் அது! க்ரேக்க சிற்பம் மாதிரி! கட்டில் நீளம் முழுவதையும் அடைத்த மாதிரிப் படுத்திருந்த அந்த உருவத்தைப் பார்க்க வயிற்றை என்னவோ செய்தது.

"என் பெயர் ஹரி. நீங்கள்?"

ஒரு சின்னப் புன்னகை தெறித்தது.

"என் பெயர் கௌதம்."

"எப்படி இருக்கிறீர்கள்?"

அவன் விரக்தியுடன் சிரித்தான்.

"ரொம்ப நன்றாக இருக்கிறேன். எனக்கு இப்பொழுது வேலை ரொம்பக் குறைச்சல். தலையை மட்டும் அசைத்தால் போதும்."

"எனக்குப் புரியவில்லை."

"க்வாட்ரப்ளீஜியா என்று சொல்கிறார்கள். கழுத்திலிருந்து ஸ்வாதீனமில்லை."

"என்ன ஆயிற்று உங்களுக்கு?"

## இரட்டைக் குழந்தைகள்!

எனக்கு இரட்டைக் குழந்தைகள். கையில் கண்டதை எல்லாம் பையன் எடுப்பான். பெண் தவழ்ந்து வந்து அதைப் பிடுங்கிக்கொள்வாள். ஒரே அழுகை. ஒன்றைச் சமாதானப்படுத்தினால் மற்றொன்று அழும். மாதம் ஒன்பதில் பையன் சற்று நடக்க ஆரம்பித்துவிட்டான். நடை பழகிய அவன் வீதிக்கதவு காற்று அடித்து, திறந்து கொள்ள வெளியில் வந்து வீதிக்கும் வந்து விட்டான். அக்கம் பக்கம் அவரவர்கள் வேலையில் இருந்தனர். அவன் வந்தது தெரியவில்லை. அவன் வெளியில் வந்த நேரம் எதிரே வந்த கார் பெட்ரோல் இல்லாமையால் நின்றுவிட்டது. இல்லையென்றால்.... அதனை இப்பொழுது நினைத்தாலும் அப்பப்பா பயங்கரம்! நல்லவேளை தெரிந்தவர் ஒருவர் அடையாளங் கண்டு அவனைத் தூக்கி வந்தார். என் பெண்ணோ அழுதால் சத்தம் ஏழு வீட்டிற்குத் தாராளமாகக் கேட்கும். எப்படியோ ஓராண்டை எட்டிப் பிடிப்பதற்குள் எங்களுடைய உயிரைப் பாதி வாங்கி விட்டார்கள்.

இருப்பினும் "என்னுடைய மகள் கொழு கொழு குழந்தைப் பரிசை" வென்ற போது இரட்டைக் குழந்தைகளை எண்ணி இரட்டிப்பு மகிழ்ச்சிதான் ஏற்பட்டது!

- எஸ். ராமா சுப்பிரமணியன்



யாமறிந்த
சுவைகளிலே
**நரசுஸ்**
சுவை போல்
இனிதாவது
எங்கும்
காணோம்!

ஜீவனுள்ள ஒரே காபி!

**நரசுஸ்**

"தெர்மலோ" காபி!



**நரசுஸ்**
**காபி கம்பெனி**
சேலம் 636 007.
கிளைகள்: தமிழ்நாடெங்கும்.

ADWAVE/NCC/1718

''ஷாக். எலெக்ட்ரிக் ஷாக். ஃபாக்டரியிலே ஏதோ ஷார்ட் ஸர்க்யூட் போலிருக்கு. ஏதோ வயரைத் தொட்டேன். அடுத்த நிமிஷம் நினைவில்லே.''

ஹரி ஒன்றும் பேசாமல் இருந்தான். இவனுக்கு என்ன சமாதானம் சொல்வது?

''டாக்டர் என்ன சொல்றார்?''

''என்ன செல்வார்? ஆறு வாரம் கழித்துத்தான் எதுவும் சொல்ல முடியும்என்கிறார். என் அம்மாவுக்கும் மனைவிக்கும் சமாதானத்துக்காக.''

அட கடவுளே! இவனுக்குக் கல்யாணமாகியிருக்கிறது! மனைவிக்கு எத்தனை வயசிருக்கும்? இவனுக்கே முப்பதுக்குள்தான் இருக்கும்போலிருக்கிறது—?

இவன் இந்த அதிர்ச்சியை எப்படித் தாங்குகிறான்?

அந்த கௌத்தம் தொடர்ந்து ஹிந்தியில் பேசிக் கொண்டு போனான்.

''என் மனைவி பிறந்தகம் போயிருக்கிறாள். ஹிமாசலப் பிரதேசத்தில் ஒரு கிராமம். சேதி போய்ச் சேருவதற்கு இரண்டு நாளாகும். அவள் இப்பொழுது இங்கில்லாததும் நல்லதுக்குத்தான்.''

இவனுக்கும் நமக்கும் எத்தனை வித்தியாசம் என்று நினைத்து ஆச்சரியமாக இருந்தது. நமக்கு சுயநலம் அதிகம்தான் என்கிற நினைப்பில் வெட்கமேற்பட்டது.

**சா**ந்தி அவனுக்கு உடற்பயிற்சி அளிக்க வந்தாள். கையை அவன் சொன்னமாதிரி அசைப்பதே பெரிய பாடாக இருந்தது.

''எக்ஸர்ஸைஸ் பண்ணப் பண்ணத்தான் உங்க வேலையை நீங்களே செய்துக்க முடியும்.''

''இன்டல் பண்றாங்க. உட்காரவே முடியல்லே.''

''மெள்ள மெள்ள முடியும். அப்புறம் நீங்களாகவே சக்கர நாற்காலியிலே உட்கார்ந்துக்கிறதுக்குப் பழக்கப்படுத்துவோம்.''

''நடக்கவும் வைக்கப் போறீங்க...!''

''கண்டிப்பா!''

''என்னைப் பிடிச்சுண்டு நீங்கபக்கத்திலேயே நிக்கப் போறீங்களா? காலுக்கு ஸ்வாதீனம் இல்லேன்னு மறந்துடாதீங்க!''

''மறக்கல்லே. சுவாதீனமில்லேன்னாலும் காலிப்பர் பொருத்திக் கட்டையை வெச்சுண்டு நடக்கலாம்.''

''ரொம்ப நல்லா இருக்கு கற்பனை செய்யவே!''

''என்வரையிலே மனுஷனுக்கு மனசுதான் முக்கியம், காலைவிட.''

''அப்படியா? பக்கத்து பெட் கௌத்தம் கிட்ட உங்க சித்தாந்தத்தைச் சொல்லுங்க ரொம்ப ரசிப்பார்!''

அவன் சட்டென்று மௌனமானான்.

''அவங்களுக்கு எந்த மாதிரி நம்பிக்கை கொடுக்கப் போறீங்க?''

''இன்னொரு பேஷண்டைப் பத்தி நான் உங்க கிட்டே பேசறது சரியில்லே ஹரி.''

''ஓ.கே. நான் கேட்கப் போறதில்லே. எனக்கு அதுக்குப் பதில் தெரியும்.''



## விளையும் பயிர்!

என் முதல் குழந்தை 77 ஜனவரி 23ம் தேதி பிறந்தான். என் இரண்டாவது குழந்தை 79 டிசம்பர் 31ம் தேதி பிறந்தான். என் கணவர் சிறந்த Sports man! ஆகவே பாகிஸ்தான் ஆட்டக்காரர் நினைவாக 'வாசிம் ராஜா'' என்று பெயர் வைத்தோம்.

வாசிம் ஒன்றரைமாதக் குழந்தையாக இருக்கும் போதே மிக குறு, குறு என்ற பார்வை உடையவனாகவும், சுட்டியாகவும் இருப்பான். குப்புற விழுந்து தவழும் நிலையில் எந்தப் பொருளையும் வாயில் போடமாட்டான். ஆனால் சிறு பூச்சிகளைக் கண்டால் மட்டும் விடமாட்டான். கையால் ஓங்கி அடிப்பான். நாள் செல்லச்செல்ல இது பெரிய வேலையாகி விட்டது அவனுக்கு. செருப்பை எடுத்துவந்து அடிப்பான். 'ஊ ஊ' என்பான். ஒருசமயம் வாசல்படியில் இருக்கும் குழியில் கட்டெறும்பு ஒன்று இருந்திருக்கு. அவன் பார்த்ததும் விரலைவிட்டுப் பிடித்திருக்கிறான். உடனே அது கடித்துவிட்டது. குழந்தை 'ஊ...ஊ' என்றான். நான் போய்ப் பார்க்கும் போது எறும்பு கடித்து விரலில் தொங்கிக் கொண்டிருந்தது. ரத்தமே வந்துவிட்டது.

என் கணவர் ஒரு சிறந்த விளையாட்டு வீரர். விஸ்கோஸ் கால்பந்தாட்ட காப்டன். வீட்டில் குழந்தைகள் விளையாடக் கால் பந்தை வைத்துள்ளோம். என் கணவர் விரும்பின நேரம் குழந்தைகளுடன் பந்து உருட்டி விளையாடுவார். வாசிம் மிக அழகாகச் சுவரைப் பிடித்துக் கொண்டு, காலால் உதைத்துத் தள்ளுவான். இவன் செயலைப் பார்க்கும் எனக்கு ''இவனும் அப்பாவைப்போல் விளையாட்டில் சிறப்பாக வருவான்'' என்ற ஒரு நம்பிக்கை ஏற்பட்டது.

- ஷமீம்பேகம்

அன்று மாலை ஒரு மிக அழகிய பெண் ஒரு முதியவருடன் கௌத்தமின் கட்டிலுக்குப் பதற்ற நடையுடன் வந்தாள். அவளை விட்டு விட்டு முதியவர் வெளியில் போய் நின்றார். அந்தப் பெண் ஓசைப் படுத்தாமல் வெகு நேரத்துக்கு அழுதாள்.

ஹரி காத்திருந்தான்.

அவள் கடைசியில் தெளிவாகச் சொன்னாள்: ''கவலைப்படாதே கௌத்தம். எதுக்கும் கவலைப்படாதே. நீ ஏத்துக்கக்கூடிய அத்தனை பொறுப்பையும் நான் ஏத்துக்கறேன். நீ உசிரோட இருக்கிறதே எனக்குப் போதும்!''

(தொடரும்)

# வேலைக்குப் போகும் பெண்

நடிப்பு:
டணால் தங்கவேலு

கதை:
சாருகேசி, தமயந்தி

சித்திரம்:
செல்லம்

போட்டோ: உத்ரா

8

இமுது வீட்டில்—

இதோ பாரு இமுது, எங்கம்மாட்ட நீ வேலைக்குப் போறேன்னு சொல்லி வச்சிருக்கேன். நீதான் என்னைக் காப்பாத்தணும்.

டேய், டேய்! நீ இல்லடா அவனைக் கல்யாணம் பண்ணிக்கிட்டுக் காப்பாத்தணும்!

அப்போ முன்னாலே எனக்கு ஒரு வேலை தேடிக் கிடைக்குமா?

ஐயோ, அதுக்குள்ள நீ கிழவியாயிடுவே. நானும் கிழவனாயிடுவேன். அப்புறம் கல்யாணம் பண்ணிக்கிட்டா அவ்வளவு நல்லாருக்காது.

கல்யாணம் பண்ணிக்காட்டியும் அவ கிழவியாயிடுவா, நீயும் கிழவனாயிடுவே! அது நிச்சயம். போகட்டும். இப்ப பிரச்னைக்கு வாங்க.

எல்லாருக்கும் வேலை கெடைக்கறதும் கல்யாணம் ஆகிறதும் தனித்தனியா பிரச்னையா இருக்கும். எனக்குதான்டா ரெண்டும் சேர்ந்து ஒரு பிரச்னையா விழுந்திருக்கு என் தலையிலே!

மாமா, உன் ஐடியாவைச் சொல்லிட்டா என்ன, சித்தப்பா கிட்ட? எனக்கென்னமோ பயம்மா இருக்கு!

உண்மையையா? அமிர்தம் கிட்டவா? சரிதான். அப்பு நம் ஆயுசுக்கும் பண்ணிக்கு தண்ணி யாசிதான்!

என்ன தீர்மானம் பண்ணியிருக்கே? நாளை வந்து மிரட்டலேன்னு இந்தக் கல்யாணம் நடக்காது போலிருக்கு!

அய்யரு மந்திரம் சொல்லிக் கல்யாணம் நடத்து வாங்க. இல்லே, அரசியல் தலைவரு பிரசங்கம், அதிகப்பிரசங்கம் லாம் பண்ணிக் கல்யாணம் பண்ணுவாங்க, பார்த்திருக்கேன். நீங்க மிரட்டி மிரட்டியே கூட கல்யாணம் நடத்தலாம் போலிருக்கு

போவ், எங்க ஒம்முறைக் கட்டிக்க ஒம் பையனுக்குக் கசக்குதா? அது அழகு என்ன படிப்பு என்ன....

எல்லாந்தான் இருக்கு. வேலை இல்லியே! அது இல்லேன்னுதான் கசக்குறா அம்மாக்காரி!

அப்பா, நீங்க யோசனை பண்ணியோ பண்ணாமயோ சீக்கிரமா ஒரு ஐடியா சொல்லிடுங்க.


டேய், அதுக்கு ஒரே ஒரு வழிதான் இருக்கு.
என்ன மாமா அது?
என்னய்யா அது?
என்னப்பா அது?


சொல்றேன், சொல்றேன். அதாவது — இவரு வேலைக்குப் போற மாதிரி நடிக்க வேண்டியது! தினம் கௌம்பி ஆபீசுக்குப் போற மாதிரி பத்து மணிக்குக் கிளம்பி டணும்!
கிளம்பி எங்கே போறது?
கிளம்பி இங்கேயே வந்துடு. சாயந்தரம் அஞ்சுமணி ஆனதும் இங்கிருந்து கிளம்பி வீட்டுக்கு வந்துடு. அப்படித்தானப்பா?


ஆமாடா! அது ஒண்ணு தான் வழி! சீமா, சம்பளப் பணம் கேப்பாளே ஓங்க அம்மா?
என் கல்யாணத்துக்குத் தர பத்தாயிரம் ரூபாயை பாங்கிலே போட்டுறலாம். மாசா மாசம் அதிலிருந்து எடுத்து அம்மாட்ட சம்பளமா கொடுத்தி டலாம்.


ஜூடியா!
பத்தாயிரம் ரூபாயா! யார் தரப்போறா?
அடப்பாவி! பிரச்னைக்கு வழி கண்டுபிடிச்சான் கூட சமாளிக்க உட மாட்டான் போலிருக்கே இவன்!
தொடரும்



# தமிழ்ப் பழங்கலை இயக்ககம், தமிழ்நாடு அரசு

இலக்கியச் சிறப்பும் கலை மாண்பும் அமைந்த பழம் பெரும் நூல்கள் பல அச்சேறாமல் ஓலைச் சுவடிகளாகவே பலரிடம் உள்ளன. சில நூல்கள் முதற்பதிப்பு மட்டும் வெளிவந்து மறுபதிப்பில்லாமல் பல்லாண்டுகள் நின்றுள்ளன. காவியங்கள் தவிர, வைத்தியம், சிற்பம், ஓவியம், இசை, வானியல், விலங்கியல், தாவர இயல் போன்ற பல துறைகளையும் சேர்ந்த பழங்கலைச் சுவடிகளையும் திரட்டி அச்சிடவேண்டும் என்று தமிழ்நாடு அரசு விரும்புகிறது. முன்னோர்கள் வழங்கியுள்ள இத்தகைய சுவடிகளைத் தம்வசம் வைத்திருக்கும் அன்பர்கள், நூல்களை அனுப்பாமல், முழுத் தகவலும் அடங்கிய பட்டியலை மட்டும் முதலில் அனுப்பிக் கடிதம் எழுதினால் மேற்கொண்டு தொடர்புகொள்ள வசதியாக இருக்கும்.

எழுதவேண்டிய முகவரி.


மீ.ப. சோமசுந்தரம்,
இயக்குநர்,
தமிழ்ப்பழங்கலை இயக்ககம்,
603, வேது மாடி,
தலைமைச் செயலகம்,
சென்னை-600 009.
தொலைபேசி எண் : 32887

# மறுக்கிறார் வலம்புரி ஜான்

சென்ற வாரக் கல்கி இதழில் 'அன்புடன் கொஞ்சம் வம்பு' என்று ஆரம்பித்து என்னைப் பற்றி வந்த குறிப்பு — இதயமில்லாமல், ஈரமில்லாமல் என்னைச் சிறுமைப்படுத்த வேண்டும் என்கிற உள்நோக்கத்தோடு எழுதப்பட்டிருக்கிறது.

என்னைப் போன்ற ஒரு பொது மனிதனை வித்தியாசமாகக்கூட விமர்சிக்கிற உரிமை படைத்தவர்கள் நீங்கள். அதை எப்போதும் மறுப்பதற்கில்லை. இருந்தாலும் அடிப்படை விவகாரங்களைப் பற்றி — ஆதாரமே இல்லாத தகவல்களை 'கல்கி' தரலாமா என்பதுதான் கேள்வி.

'வலம்புரி ஜான் இந்து மதத்தில் சேர்ந்திருக்கிறார்' என்று உங்களுக்கு எப்படி எழுத வந்தது என்பதுதான் எனக்கு வியப்பாக இருக்கிறது. எந்த ஆதீனகர்த்தருக்கு முன்பாக, என்றைக்கு, எங்கே நான் இந்துவானேன் என்கிற தகவலை உடனே நீங்கள் தரவேண்டும் என்று பணிவோடு கேட்டுக் கொள்ளுகிறேன்.

நான் இந்துவுமில்லை: இஸ்லாமியனுமில்லை. நான் மனிதன்... மனிதன்... மனிதன். அவ்வளவே!

அம்பிகை கோவிலுக்கும் போவேன்; அன்னை வேளாங்கன்னியையும் பாடுவேன்; பள்ளிவாசலுக்கும் போவேன்; இனி முடிந்தால் பௌத்தப் பள்ளிகளைக்கூடத் தேடுவேன்! எதற்காக என்னை இந்துவாக்குகிறீர்கள்? 'இந்து' என்பது மதமல்ல; அது ஒரு வாழ்க்கை முறை என்று நம்புகிறவன் நான். ஆக, 'இந்து' என்கிற மாபெரும் மனித சமுத்திரத்துக்குள்ளே இஸ்லாமியனுக்கும் இடமுண்டு. கிறிஸ்தவனுக்கும் இடம் உண்டு. கடவுளை மறுக்கிறவனுக்கே கூட இடமுண்டு. எதற்காக மீண்டும் ஒரு முறை என்னை இந்து வாக்கிப் பார்க்கிறீர்கள்?

நான் எவ்வளவு சாதாரணமானவன் என்றாலும் ஒரு வாராந்தரியின் ஆசிரியர். . இப்படிக் காரணமே இல்லாமல் என்னைக் காயப்படுத்துவதில் 'கல்கி'க்கு என்ன பெருமை சேர்க்க இயலும்?

நெற்றியில் குங்குமம் வைத்துக் கொள்வதாலேயே ஒருவர் இந்துவாகிவிடுகிறார் என்கிற உங்களது மாபெரும் கண்டுபிடிப்பிற்கு நோபல் பரிசுதான் தரவேண்டும்! ஏன் 'இந்து' என்கிற மகத்தான வாழ்க்கை முறையை இப்படிக் கொச்சைப்படுத்துகிறீர்கள்? தாடி வளர்த்தால் இனி தாகூர்; மொட்டை போட்டுக் கொண்டால் காந்தி அவ்வளவுதானே?

அன்புள்ள
வலம்புரி ஜான்

சென்னை-29

(திருவலம்புரிஜான் மனம் புண்படநேர்ந்ததற்கு மிகவும் வருந்துகிறேன். சகோதர பத்திரிகையாசிரியரான அவர் தம் கடிதத்தில் எழுதியுள்ள ஆட்சேபணைகளையே தகவல் சேகரித்த கௌசல்யாவிடம் நான் பலமுறை எழுப்பியும் தமக்கு 'உறுதியாகத் தெரியும்; தகவல் சரியானதே' என்று அவர் அழுத்தமாகக் கூறியதால் நான் அவர்களுக்கு போன்செய்து தகவலைச் சரிபார்க்கத் தவறிவிட்டேன். கல்கி ஆசிரியர் என்ற முறையில் தவறுக்கு முழுப்பொறுப்பேற்க வேண்டியவன் நானே. நான் அவர்களைச் சிறுமைப்படுத்த வேண்டும் என்ற எண்ணம் எனக்கோ கல்கி பத்திரிகைக்கோ கௌசல்யாவுக்கோ சிறிதும் இல்லை என்பதை வலியுறுத்த விரும்புகிறேன். - கி. ராஜேந்திரன்)

---

## அட்டையில் :
## குமாரி குல்நார் டி. இராணி

நடிப்பதில் ஏகப்பட்ட ஆர்வம். பரதநாட்டியம் தெரியும். தமிழ், ஆங்கிலம், ஹிந்தி—தெரியும். படிப்பிலும் விளையாட்டிலும் படு சுட்டி. அப்பா பெயர் இராணி என்று இருந்தாலும் முழுக்க முழுக்கத் தமிழ்ப் பெண்.

இப்போது ப்ளஸ் டூ முதல் வருடம் படித்துக்கொண்டிருக்கிறார்.

பகலில் பள்ளிக்கூடம் போய்க் கொண்டே மாலை நேரங்களில் பிரபல ஐந்து நட்சத்திர ஹோட்டல்களில் வாய்ப்புக் கிடைக்கும் போதெல்லாம் வெளி நாட்டு விருந்தினரைத் தம் பரத நாட்டியத்தால் கவர்ந்து வருகிறார் குல்நார்.

பொழுது போக்கு: பேச்சுப் போட்டி, விளையாட்டுக்களில் பரிசு வாங்கிக் கொண்டிருப்பது!

தகவல்: காஞ்சனா

வண்ணப்படம்: • சரஸ்வதி சத்தியமூர்த்தி





# கற்புக்கு இலக்கணம் கூறிய கவி

"கண்ணன் என் தந்தை" என்னும் பாட்டிலே, 'நால்வருணப் பாகுபாடு பற்றி பாரதி கூறுவது வருமாறு:

நாலு குலங்கள் அமைத்தான் – அதை
நாசமுறப் புரிந்தனர் மூட மனிதர்.
சீலம் அறிவு கருமம் – இவை
சிறந்தவர் குலத்தினிற் சிறந்தவராம்.
மேலவர் கீழவர் என்றே – வெறும்
வேடத்தில் பிறப்பினில் விதிப்பனவாம்
போலிச் சுவடியை எல்லாம் – இன்று
பொசுக்கிவிட்டா லெவர்க்கும்
நன்மையா மென்பான்.

தாழ்த்தப்பட்டோரை நால் வருணத்துக்கும் கீழான ஐந்தாவது வருணமாக வைத்து அவர்களுக்கு "பஞ்சமர்" என்னும் இழி பொருளில் சமய வைதிகர்கள் பெயர் தந்தனர். இதற்கு வேதங்களிலேயும் சாஸ்திரங்களிலேயும் சான்றுகள் இருப்பதாகவும் சாதித்தனர். இந்த வாதத்தைப் பாரதியார் ஏற்கவில்லை. எதிர்க்கவும் செய்தார்.

இன்று வேதங்கள் என்று சொல்லப்படுபவை யெல்லாம் உண்மையான வேதங்களல்ல. உயர் சாதி மனப்பான்மையுடையவர்கள் தங்கள் நலனுக்கென்று எழுதி வைத்தவை. பழைய வேதங்களுக்கும் இந்தப் புனைந்துரைகளுக்கும் தொடர்பில்லை என்று பாரதி யார் கூறினார்:

வேதங்கள் கோத்து வைத்தான் – அந்த
வேதங்கள் மனிதர்தம் மொழியி லில்லை;
வேதங்கள் என்று புவியோர் சொல்லும்
வெறுங் கதைத் திரளிலவ் வேதமில்லை
வேதங்களென் றவற்றுள்ளே – அவன்
வேதத்தில் சில சில கலந்ததுண்டு;
வேதங்களன்றி யொன்றில்லை – இந்த
மேதினி மாந்தர் சொல்லும்
வார்த்தைகளெல்லாம்.

சமூக சீர்திருத்தம் பற்றிப் பெரியார் ஈ.வே ரா.வோ, வள்ளற் பெருமானோ சொல்வதை விட வைதிகக் கோட்டையான அந்தணர் வருணத்திலே பிறந்து, அந்தணர் ஓதவேண்டிய வேதங்களையும் உபநிடதங்களையும் புராணங்களையும் சாத்திரங்களையும் பழுதற ஓதி, சொந்த வாழ்க்கையிலேயும் வள்ளுவர் சொன்னது போல எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகும் அறவோனாக அந்தணனாக வாழ்ந்த பாரதி சமூக சீர்திருத்தம் பற்றிப் பேசினார் என்றால், அது இந்த மண்ணுக்குள்ளே ஆம், தமிழ் மண்ணுக்குள்ள தனிச் சிறப்பு என்று சொல்வேன்.

காந்தியடிகளும் காங்கிரசும் தீண்டாமை ஒழிப்பில் ஈடுபடுவதற்கு முன்பே, வேறெவரும் கூட அதைப் பற்றிச் சிந்திப்பதற்கு முன்பே பாரதியார் ஒருவர் தான் அது பற்றிப் பாடினார். தமிழ்ப் புலவர்கள் வரிசையிலே தீண்டாமைக் கொடுமையை எதிர்த்து முதன் முதலில் கவிதை புனைந்தவர் – கட்டுரை எழுதியவர் பாரதியாரே யாவார்.

"தீண்டாமைக்கு எதிரான கருத்து தேவாரத்தில் இருக்கிறது. திவ்யப் பிரபந்தத்திலிருக்கிறது" என்றெல்லாம் சைவர்களும் வைணவர்களும் சொல்லுகின்றனர். அது உண்மை. நானும் படித்திருக்கிறேன். ஆனால் இழிகுலம் படைத்தாரேனும் திருவரங்கத்தில் கோயில் கொண்டுள்ள பொன்னரங்கப் பெருமானை வழிபடுவானானால், அவனை மனிதனாக ஏற்றுக் கொள்ளத் தயார் என்றும் பறையர் என்போருக்கு விடுதலை அளிக்க அவர் சைவராக வேண்டுமென்றும்தான் அந் நூல்கள் சொல்கின்றன.

ஏதோ அவர்கள் காலத்திலே அவ்வளவேனும் சொல்லி வைத்தார்களே, அதுவே ஒரு புரட்சிதான். ஆனால் தீண்டாமை ஒழிய பாரதியார் நிபந்தனை எதுவும் போடவில்லை. பறையர் எனப்படுவோர் மனிதராகப் பிறந்திருக்கிறார்களே, அதுவே மற்றமனிதர்களோடு அவர்களைச் சமமாக நடத்தப் போதுமானது-இதுதான் பாரதியாரின் கொள்கை.

'கற்பு' – 'கற்பு' என்று பேசுகிறார்களே, அது பாரதியாருக்கும் உடன்பாடு தான். ஆனால் அந்தக் கற்பு நெறியைப் பெண்கள் தலையில் சுமத்திவிட்டு ஆண்கள் எப்படியும் வாழலாம் என்றிருக்கிறதே, அந்தக் கொடுமையைப் பாரதியார் எதிர்த்தார்.

'பதிவிரதை' என்னும் தலைப்பிட்டு, கற்பு நெறி பற்றிப் பாரதியார் எழுதியுள்ளார். இதோ, அதைப் படியுங்கள்.

"ஸ்திரீகள் பதிவிரதையாக இருக்க வேண்டும் என்று எல்லோரும் விரும்புகிறார்கள். அதிலே கஷ்டம் என்னவென்றால், ஆண் பிள்ளைகள் யோக்கியர்கள் இல்லை. ஆண்மகன் ஒவ்வொருவனும் தன் மனைவி, மகள் பதிவிரதைகளாக இருக்க வேண்டும் என்பதில் எத்தனை ஆவலோடு இருக்கிறானோ, அத்தனை ஆவல் இதர ஸ்திரீகள் பதிவிரதை விஷயத்தில் காட்டுவதில்லை.

"அடா! பரம மூடர்களே! ஆண்பிள்ளைகள் தவறினால் ஸ்திரீகள் எப்படிப் பதிவிரதைகளாக இருக்க முடியும்?"

(மயிலை இலக்கிய வட்டம் பாரதிய வித்யாபவனச் சொற்பொழிவிலிருந்து)

ம.பொ.சி.

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd, at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600 032. (Phone : 431543) Editor : K. Rajendran

"நான் ஒரு டீச்சர்
நான் அணியும் ஆடைகள் என் லட்சியத்தைப் போதிக்க வேண்டும், இல்லையா."

உங்கள் அந்தஸ்தே தனி
அதற்கேற்ற துணி



மஃபத்லால்
ஃபேப்ரிக்ஸ்



சூட்டிங்குகள், ஷர்ட்டிங்குகள், புடவைகள், அச்சிட்ட துணிகள்
மற்றும் டெனிம்கள்.

மஃபத்லால் இண்டஸ்ட்ரீஸ் நியூ ஷொர்ராக் மில்ஸ் மஃபத்லால் ஃபைன்

MF-30 TAM

REGISTERED No. M. 4352
Registered as a Newspaper in Sri Lanka